*Tirāviṭa nāṭu*
*Malar 12, ital 38*
*March 21, 1954*

Record no. 1005

போன் நெ 15. விலை 2 அணா. REGD. NO. 4642

# திராவிடநாடு

மலர் 12 | 21—3—54 | இதழ் 38

# யார் இதற்குப் பொறுப்பு?

இந்த ஆண்டு போதிய மழை பெய்ததால் நல்ல விளைச்சல் உண்டாகும் என்று எல்லோருமே எதிர்பார்த்தார்கள். கடந்த ஏழெட்டு ஆண்டுகளாகவே நல்ல மழை இல்லாததால் நாடு காடாகும் நிலைமை நெருங்கிக்கொண்டிருந்த சமயத்தில் — இந்த ஆண்டில் திடீரென்று போதிய மழை பெய்ததால் நல்ல விளைச்சல் உண்டாகுமென்று யார்தான் எதிர்பார்த்திருக்கமாட்டார்கள். ஆனால் நடந்ததென்ன?

வரப்பு உயர்ந்தது! நீரும் உயர்ந்தது! நெல்லும் உயரும் நிலைமையை அடைந்தது! என்றபோதிலும் நெல்லின் முழு உயரமும் ஏற்படவில்லை! அதனால் குடி உயரவில்லை! குடி உயராததால் கோனும் உயரவில்லை. இதற்கு என்ன காரணம்? நெல் உயர்வதற்காக நீரும், நீர் உயர்வதற்காக வரப்பும் இருந்தும், நெல், அதன் முழு வளர்ச்சியையும் பெற அல்லது அடைய முடியவில்லை! அதனால் குடியும் கோனும் உயரமுடியவில்லை! ஏன்?

வரப்பையும், நீரையும், நெல்லையும், குடியையும், கோனையும் உயர வைக்கும் தனி உரிமையைப் பெற்ற அந்த உத்தமர் இருக்கிறாரே, அவருடைய கோபமேதான் இதற்குக் காரணமாம்! யார் அந்த உத்தமர்? தெரிந்துகொண்டிருப்பீர்கள்! "அவனன்றி ஓரணுவும் அசையாது" என்ற பழமொழி யாரைக் குறிக்கிறதோ, சாட்சாத் அவரேதான் இந்தக் கோபாக்னியைக் கிளப்பி நெல்லின் வளர்ச்சியை இடையில் துண்டித்துவிட்டாராம்! யார் இந்த அரும்பெரும் ஆராய்ச்சியைச் செய்து யாராலும் அறிய முடியாத இந்தப் பேருண்மையை வெளியிட்டது? அதனையும் தெரிந்துகொண்டிருப்பீர்கள். கடவுள் பக்தியிருந்தால் கைகூடாத காரியம் எதுவும் இல்லையென்று யார் சதா சர்வகாலமும் கூறிக்கொண்டிருக்கிறாரோ, சாட்சாத் அவரேதான், கனம் ஆச்சாரியாரேதான் இந்த உண்மையைக் கண்டுபிடித்துக் கூறியிருக்கிறார்.

7—3—54-ல் உத்தரமேரூரில் நடைபெற்ற காங்கிரஸ் மாநாட்டுக்குப் புறப்பட்ட ஆச்சாரியார் நேரே அங்கு செல்லாமல், சிறிது நேரம் கைலாயத்துக்குச் சென்று கடவுளைக் கண்டு பேசிவிட்டு வந்திருக்கிறார். கடவுளோடு உரையாடிக் கொண்டிருந்த சமயத்தில் அந்த உமாமகேசுவரன் ஒரு முக்கியமான உண்மையை ஆச்சாரியாரிடம் கூறியிருக்கிறார்.

"நான் இந்தப் பனிமலையில் (கைலாயத்தில்) யாருக்கும் தெரியாமல் மறைந்து கொண்டிருக்கிறேன்—அண்மையில் மிஸ்டர் இல்லரியும் தென்சிங்கும் கூட இங்கு வந்து போனார்கள். அவர்கள் கண்களில் படாமல் தப்பித்துக்கொள்ள நான் பட்ட சிரமம் இருக்கிறதே! உமக்கு எப்படித் தெரியும்? இதோ, என் பக்கத்தில் அமர்ந்திருக்கும் உமையம்மையைக் கேட்டுப் பாருங்கள்—! அது கிடக்கட்டும்! அது என்னுடைய சொந்த விஷயம்!

கைலையில் எங்கோ ஒரு மூலையில் சிவனே என்று கிடக்கும் என்னைப் பற்றியும், என்னுடைய திருவிளையாடல்களைப் பற்றியும், உம்முடைய ஊராளும் வேலையோடு வேலையாக விளம்பரப்படுத்தி வருகிறீரே, அதற்காக என் மனமார்ந்த நன்றியை என்னுடைய சார்பிலும் எனது இடபாகத்தமர்ந்திருக்கும் இமயவள் சார்பிலும் தெரிவித்துக் கொள்வதோடு, என்னுடைய புதிய திருவிளையாடலையும் உலகறிவித்துவிடும்படி கேட்டுக்கொள்கிறேன். அதாவது, உம்முடைய வேண்டுகோள் கலந்த ஆணையின்படி நாட்டு மக்கள் என்மீது செய்த பஜனையின் பயனாக நாட்டில் நல்ல மழை பெய்யும்படி செய்தேனல்லவா? அதனால் நாட்டில் நல்ல விளைச்சல் உண்டாகுமென்று குடிமக்கள் எல்லோரும் குதூகலமாக இருந்தார்கள் அல்லவா? அந்த உழவர்பெரு மக்களுக்கு ஏற்பட்ட குதூகலத்தை என்னால் பொறுத்துக் கொள்ள முடியவில்லை. உடனே எனக்கொரு யோசனை தோன்றிற்று!

ஆரம்பக் கல்வித்திட்டம் என்ற அக் கிரமத்தை அமுலாக்குவதன் வாயிலாக நாட்டு மக்களின் நல்வாழ்க்கையைக் கெடுக்க வேண்டுமென்று உமக்கு எப்படி ஒரு அபூர்வமான யோசனை தோன்றிற்றோ, அது போலவே எனக்கும் இந்தயோசனை தோன்றிற்று. அதாவது, நாட்டுமக்களின் நல்வாழ்வில் மண்போடுவது என்ற முடிவுக்கு வந்தேன். உடனே எனது அனுபவத் தோழர்களில் ஒருவரான பிரம்மாவை அழைத்து வளரும் நெற்பயிரை வதைக்கும் வல்லமை பெற்ற ஒருவிதப் பூச்சிகளைச் சிருஷ்டித்து விளைச்சல் நிலங்கள் எங்கெங்கு இருக்கின்றனவோ அங்கெல்லாம் அனுப்பும்படி செய்தேன். அதன்பிரகாரம், உம்முடைய அரசியலை அரிக்கும் பூச்சிகளைப் போலவே என்னுடைய இந்தப் பூச்சிகளும் நெற்பயிர்களை அரித்து நாசமாக்கும் நல்ல காரியத்தைச் செய்துவிட்டன. இந்த உண்மையை உங்களவர்கள் (காங்கிரஸ் காரர்கள்) கூடும் உத்தரமேரூர் மாநாட்டில் கூறிவிட்டீரானால், அது, உலக முழுவதும் பரவிவிடும் என்று'' கூறினாராம் கடவுள்.

அந்தக் கட்டளையைச் சிரமேற் கொண்டுவந்த ஆச்சாரியார்,

''கடவுள் கிருபையால் நல்ல மழை பெய்ததால் உங்களுக்குத் திமிர் உண்டாகாமல் இருக்க ஆண்டவன்பூச்சிக்கு ஏற்பாடு செய்திருக்கிறார்.''

என்ற கடவுளின் உத்தரவை, அதே கடவுளின் படைப்பான மக்களிடம் சார்வு (கோர்ட்பாஷை) செய்திருக்கிறார்.

நெற்பயிர்களில் பூச்சி விழுந்தது நாசமானதற்குக் கடவுளின் கோபந்தான் காரணமாம்! நல்ல விளைச்சல் நாட்டில் ஏற்பட்டால், மக்களுக்குத் திமிர்பிடித்து விடுமாம்! இந்தத் திமிரை அடக்கத் திரிலோகசுந்தரர் பூச்சியை அனுப்பினாராம்! நாட்டை ஆளும் அமைச்சர் இந்த ''நல்ல'' செய்தியை நமக்கெல்லாம் அறிவிக்கிறார்.

''கடவுளை வேண்டி பஜனைசெய்யுங்கள் — நல்ல மழை பெய்யும்'' என்று மந்திரி சொன்னார்—பஜனை பண்ணினோம்—மழையும் பெய்தது! ஆனால் மழையின் பயனை ஓங்கி வளர்ந்த நெல் நடுவில் ஒடித்தெறியப்பட்டது! இநல் வளர்ந்தால் நமக்கெல்லாம் திமிர் வளருமாம்! திமிர் வளர்ந்தால் தெய்வீகம் மறையுமாம்! எனவே திமிரை அடக்கத் தெய்வம் பூச்சியை அனுப்பிற்றாம்! பூசுரர் கூறுகிறார் இவ்விதம்! கடவுளை நம்பினோர் கைவிடப்படமாட்டார்கள் என்றார், ஆச்சாரியார்! அதன்படி கடவுளை நம்பினோம்! கடவுள் கண்ணில் மண்ணைத் தூவிவிட்டார்! இதற்கு யார், பொறுப்பு? கடவுளா? கடவுள் விளம்பரம் செய்வதன் வாயிலாகவாவது தம்முடைய பதவியைக் காப்பாற்றிக் கொள்ளலாம் என்ற நிர்ப்பந்தத்துக்கு ஆளாக்கப்பட்டிருக்கும் ஆச்சாரியாரா? யார் இதற்குப் பொறுப்பு?

பொறுப்பு யாராக இருந்தாலும், இந்தப் பெரிய நஷ்டத்தை—நாட்டின் நல்வாழ்வுக்கு நஞ்சாக வந்த—வரும்படி செய்யப்பட்ட இந்த நாச காரியத்தை நமக்குத் தந்தவர் கடவுளாக இருந்தால், அப்படிப்பட்ட நயவஞ்சகக் கடவுளை நாடு எப்படி ஏற்றுக் கொள்ளமுடியும் என்பது தான் அறிவுலகம் சிந்தித்துத் தெளிவுபெற வேண்டிய ஒன்றாகும்.

நாட்டில் மழையில்லாத காரணத்தால், ரூபாய்க்கு 4 படி 6 படி என்று விற்கப்பட்ட அரிசி ரூபாயிக்கு ஒருபடி முக்காற்படி என்ற மிக மிக மோசமான கஷ்டத்தைக் கடந்த ஏழெட்டு ஆண்டுகளாகவே மக்கள் அனுபவித்தது ஒருவேளை மகேசுவரனுக்குத் தெரியாமல் இருக்கலாம். நாட்டவர்களோடு பழகும் இந்த 'நல்ல'வருக்குமா தெரியாது? தெரிந்தும் கூறுகிறார், பூச்சி அரிப்புக்குக் காரணம் தெய்வத்தின் கோபம் என்பதாக!

தெய்வம் பூரிக்கும் அளவுக்கு நாட்டில் நடைபெற்ற பஜனையின் விளைவாக நல்ல மழை பெய்ததென்றால், அந்த மழையின் பயனை மக்கள் அனுபவிக்கும்படி செய்வது தானே அந்தத் தெய்வத்துக்கு இருக்கக்கூடிய நல்லியல்பாகும். இதற்கு மாறாக, நல்ல மழை பெய்த காரணத்தால் நல்ல விளைச்சல் ஏற்படும் என்பதைஅறிந்த ஆண்டவன் இந்த விளைச்சல் மக்களைத் திமிர் அடையச் செய்துவிடும் என்று கருதி, நச்சுப்பூச்சிகளை அனுப்பி நாசம் செய்தார் என்று ஒரு நாட்டை ஆளும் அமைச்சர் பொறுப்பற்ற முறையில் கூறுகிறார் என்றால், இதனைவிட பட்டாகமான அறிவு வேறெவரிடமாவது எதிர்பார்க்க முடியுமா?

உண்மையாகவே, ஒரு கடவுள்—எந்த வடிவத்திலோ—வடிவமில்லாமலோ இருந்துகொண்டு இவ்வுலகை இயக்கிக்கொண்டிருக்கிறதென்பது யாராலாவது நிரூபித்துக் காட்டப்பட்டால், அப்படிப்பட்ட கடவுள் அல்லது சக்தி இந்த நாச காரியத்தை— வாங்கியெடுத்ததைத் தானே திருப்பிச் சாப்பிடும் குக்கலைப்போல்செய்யும் என்று அவர்களே கூடக் கூறமாட்டார்கள். ஆனால், ஆச்சாரியார் கூறுகிறார், மழையைப் பெய்வித்த அந்தக் கடவுளே நச்சுப்பூச்சியையும் அனுப்பினர் என்பதாக!

ஆச்சாரியார் இவ்விதம் கூறுவதை ஊன்றிக் கவனிப்பவர்களுக்கு அவர் ஒரு நாஸ்திகரோ என்றுகூட எண்ணத் தோன்றும்போல் இருக்கிறது. அவருடைய இந்த வாதம் அதாவது மழையைத் தந்த கடவுளே நச்சுப்பூச்சியையும் தந்தார் என்று கூறுவது கடவுள் தன் மைக்கே இழுக்குக் கற்பிப்பது போல் இருக்கிறது. மக்கள் பக்தி மேலிட்டால், மழையை வேண்டிக் கடவுள்மீது பஜனை பாடினர்; கடவுளும் அந்த பஜனைக்கு மகிழ்ந்து மழையை அனுப்பினர். மழைவந்து பயிரை வளரும்படி பெய்தது. இந்த வளர்ச்சியைக் கண்ட கடவுளுக்கு மனம் பொறுக்கவில்லையாம்! பயிர் வளர்ந்தால் மக்களுக்குத் திமிர் உண்டாகிவிடுமென்பதை உணர்ந்து, உடனே அந்தப் பயிரை அழிக்கும் அற்புதமான பூச்சியை அனுப்பிவைத்தாராம்! இவ்விதம் கூறுகிறார், இந்த மாகாணத்தை ஆளும் மந்திரியார்! மக்களும் இதனைக் கேட்டுக்கொண்டு, அவருடைய அறிவுக்கூர்மையைப் பாராட்டி, இப்படிப்பட்டவரின் ஆட்சி இன்னும் நீடிக்கவேண்டுமென்று பிரார்த்திக்கிறார்கள்! நமக்கு ஒன்றும் புரியவில்லை!

★



# அயோத்தியில் ஆச்சாரியார்

கன்னி என்ற வாசகத்தை, கனி என்று எண்ணி, நான் தவறாகக் கூறியிருந்தாலும், என் ஏற்பாட்டின்படியே நீங்கள் ஐவரும் நடந்து கொள்ளவேண்டும் — இது உங்கள் மாதாவின் கட்டளை.

*

இந்த ஏற்பாட்டுக்கு, நீ உட்பட்டுத் தீரவேண்டும். நீ, என் மனைவி; நான் உன் கணவன், என் சொல்லைத் தட்டிநடப்பது பதிபக்தியை மீறிய தாகும்.

*

நீ, என் தாயாக இருக்கலாம். அதனால், உன் ஏற்பாட்டின்படி நடக்க நான் சித்தமாக இல்லை—உன் ஏற்பாடு எனக்கு உகந்ததாகத் தெரியவில்லை.

*

நீர், என் கணவராக இருக்கலாம்; உம் ஏற்பாட்டை நான் ஏற்றுக் கொள்ள முடியாது.

*

கன்னி கொண்டுவந்தேன் என்று கூறியதை, கனி என்று கருதிய காரணத்தால் 'ஐவரும் பங்கிட்டுக் கொள்க' என்று கூறிய தாயாரின் வாசகத்தைத் தவறு என்று கடைப்பிடித்து ஐவருக்கும் துரோபதையை மனைவியாக்கிக்கொண்ட ஓர் ஏற்பாடு, அந்தக் காலத்துக்கும் இடத்துக்கும் உகந்ததாகக் கருதியிருந்தாலும், இந்தக் காலத்துக்கு அது உகந்ததுமல்ல—எள்ளி நகையாடத் தக்க செயல் என்றே எல்லோரும் கூறுவர். இன்று, எந்தத் தாயாவது, தனக்குப் பிறந்துள்ள ஐந்து பிள்ளைகளைப் பார்த்து, நான் ஓர் அழகான பெண்ணைப் பார்த்திருக்கிறேன்—நீங்கள் ஐவரும் இவள் ஒருவளையே மனைவியாகக் கொண்டிருங்கள்—இது உங்கள் மாதாவின் கட்டளை என்று உத்தரவிட்டால், அந்த மாதாவின் சொல்லுக்கு மதிப்புத் தருபவர்கள் எத்தனை பேர் இன்று இருப்பார்கள் என்று நீங்களே எண்ணிப் பாருங்கள். அப்படி ஒத்துக்கொள்வதாக வாதத்துக்கு ஒப்புக்கொண்டாலும், அந்த ஐவரும், ஒரே காலத்தில் பிறந்திருக்க முடியாது—வயது வித்தியாசம் மிகவும் பலமாக இருக்கும். அந்தஜவரில், அந்தமங்கைக்கு ஒத்த வயதுடையவனோடேதான் அவள் மிகவும் இன்பத்தோடிருப்பாள் — மற்றவர்களை வெறுப்பாள் என்று நாம் கூறவேண்டியதுமில்லை. எனவே, அன்றைய பழையகால ஏற்பாடு இன்று, தாயிடம் பக்தி செலுத்துவது என்ற ஒரே முறைக்காக எப்படி ஒத்துவரும்?—எப்படி அதை ஏற்றுக்கொள்ளமுடியும்?

மனைவி என்ற காரணத்துக்காக—கணவன் சொல்லைத் தட்டி நடப்பது நீதியாகாது என்ற ஏற்பாட்டைக் கடைப்பிடித்து நடந்த காரணத்தாலேயே, மாற்றாருடன் செலத் துணிந்தாள் — இயற்பகையின் துணைவி. அந்த ஏற்பாடும் பதிபக்தியும், இன்று ஏற்றது என்றும் பொருத்தமானது என்றும், சித்த சுவாதீனமுள்ள எவரும் கூறார்.

தாயாரிடம் மகன் எப்படி பக்தி செலுத்துவது என்று ஏற்பாடு செய்து வைத்த இராமாயணத்திலேயே, தாயார் கைகேயி, தனக்காக செய்த ஏற்பாடு தகுதியற்றது என்று கூறிய தனயன் பரதனும் இல்லாமற் போகவில்லை.

கணவனிடம் மனைவி எப்படி நடப்பது என்ற பண்பாட்டைப் போதிக்கும் அதே நூலில்தான், கணவன், தான் கூறிய வாக்கை மறந்து செய்யும் ஏற்பாட்டை ஏற்றுக்கொள்ளமுடியாது என்றுகூறிய கைகேயியும் இல்லாமற்போகவில்லை.

ஏற்பாடு—மாற்றக்கூடாததுமல்ல — மாற்ற முடியாததுமல்ல.

ஏற்பாடு—இடத்துக்கும், காலத்துக்கும் தக்கபடி மாறுவது—மாற்றப்படவேண்டியது.

இப்படிப்பட்ட ஒரு ஏற்பாட்டை எல்லோரும் எந்தக் காலத்திலும் ஏற்று நடத்தவேண்டும் என்று கட்டளையிடுவதோ, நிர்ப்பந்தப் படுத்துவதோ, நேர்மையற்றது மட்டுமல்ல, நீதிக்கு முரணானதும் கூட.

என்றாலும்கூட, பழைய ஏற்பாட்டையும் பண்பாட்டையும் உடைக்கப் பார்க்கிறோமாம் — யாரும் உத்தமர் ஆச்சாரியார் உரைக்கிறார்.

பழைய ஏற்பாடுகள் அனைத்தையும், ஆச்சாரியார் அப்படியே கடைப்பிடிக்கிறாரா என்று பார்த்தால், அதுவும் இல்லை. கட்டைவண்டிக்குப் பதில் காரில்தான் பவனி வருகிறார். தழைகளை உடுத்திக் கொள்வதற்குப் பதில் தகுந்த உடைகளைத்தான் உடுத்திக்கொள்கிறார்.

ஆனாலும்கூட, உளுத்துப்போன ஏற்பாடுகளை — காலத்துக்குதவாத ஏற்பாடுகளை — கண்மூடித்தனமான ஏற்பாடுகளை — பண்பாடு, பக்தி என்ற பெயரால் புகுத்தப் பார்க்கிறார்.

அந்த அளவோடு ஆச்சாரியார் நின்றுவிடவில்லை. இராமனுக்காக வக்காலத்து வாங்கிக்கொண்டவர் போலவே பேச ஆரம்பித்துவிட்டார்.

''இவர்களோ ராமனைவிட ராவணன் நல்லவன் என்கிறார்கள். ராவணன் சீதையைத் தூக்கிக்கொண்டு போனான். எவ்வளவு கல்காரியம்? சீதை பதிவிரதை அல்ல என்று தாங்கள் பார்த்தது போல் சொல்லுகிறார்கள்''

என்று, சீதையின் பதிவிரதைத் தன்மையைப் பக்கத்தில் நின்று பார்த்துக்கொண்டிருந்த இந்தப் பெரியவர் கூறுகிறார்.

இராமனோ, இராவணனோ நமக்குச் சம்பந்தப்பட்டவர்கள் அல்ல. ஒருவன் அயோத்தியைச் சேர்ந்தவன்; மற்றொருவன், இலங்கையைச் சேர்ந்தவன்.

இந்த இரண்டு பேரையும் உருவகப்படுத்தி இராமாயணம் பாடிவைத்தார், வால்மீகி.

வால்மீகியின் இராமாயணத்தை வைத்துக்கொண்டு, தன் கைச்சரக்

கையும் சேர்த்து, கவி பாடி வைத்தான்—கம்பன்.

எனவே, வால்மீகியின் உருவகப்படி இராமனே இராவணனே இருந்திருந்தாலும், கம்பன் உருவகப்படி இராமனே இராவணனே இருந்திருந்தாலும்—நமக்குக் கவலை இல்லை.

தேவாம்சம் பெற்ற இராமன், சூர்ப்பனகையைப் பங்கம் செய்யச் சொன்னது போற்றத்தக்கதென்றும், தங்கையை மான பங்கம் செய்தவனின் மனைவியை இராவணன் சிறை எடுத்தது இகழத்தக்கது என்றும் இவர் செப்புகிறார்.

சீதையைத் தூக்கிக்கொண்டு போனது எவ்வளவு நல்ல காரியம் என்று கேலிமொழி பேசும் இவர், சூர்ப்பனகையை பங்கம் செய்தது எவ்வளவு நல்ல காரியம் என்பதை எண்ணிப் பார்த்தாரா? நீதி இருவருக்கும் பொதுதானே?

இராமன், தன் துணைவலிக்காக, விபீடணனைத் துணைக்கொண்டது எவ்வளவு இழிவான செயல்? விபீடணன்புரிந்த பாதகமும் எத்தகையது?

இன்றும், விபீடணனைப்போன்ற செயல்புரிந்த மாணிக்கவேலர்களையும், அப்படிப்பட்ட விபீடணர்களின் துணைவலியாலேயே நாட்டை ஆளும் ஆச்சாரியாரையும் நாம் எப்படிப் போற்றமுடியும்?

அண்ணனுக்குத் தம்பி துரோகம் விளைவிக்கக் கூடாது, என்று நீதி போதித்து, விபீடணனை அனுப்பி விட்டிருக்கலாமே, இராமன்! செய்தானா? ஏன் செய்யவில்லை? அப்படிப்பட்டவனை நேர்மையுள்ளவன் என்று எப்படி ஏற்றுக்கொள்ள முடியும்.

அதேபோல், இன்றும், மாணிக்கவேலர்களை, ஒரு கட்சியின் பெயரைக் கூறி ஓட் பெற்றுவிட்டு மற்றொரு கட்சிக்கு மாறுவது, பெருந் துரோகம் என்று கூறி ஆச்சாரியார் அனுப்பியிருக்கலாமே!

இவருடைய செயலும் இராமனது செயலும் இணைந்து இருப்பதாலேயே, இராமனை இவர்போற்றுகிறார் என்று நாம் கூறுவதில் என்ன தவறு காணமுடியும்?

அதுமட்டுமல்லாமல், 'சீதையை பதிவிரதை அல்ல என்று தாங்கள் பார்த்ததுபோல் சொல்லுகிறார்கள்' என்று கூறும் இவர், சீதையின் அந்தரங்கத் தோழியாக இருந்து, அவளுடைய பதிவிரதைத் தன்மைக்கு சாட்சி கூற வந்திருக்கிறாரே, இவர், சீதையின் பதிவிரதத் தன்மையை நிரூபிக்கமுடியுமா?

சீதை கற்புடைய மங்கை என்று கூறும் இவருக்கு, சீதையின் ஒரு வாசகத்தை நினைவுக்குக் கொண்டு வர விரும்புகிறோம்.

மானைத் துரத்திச் சென்ற இராமனை, தேடிப் பார்த்து வா என்று சீதை இலட்சுமணனிடம் சொன்னாள். மறுத்தான், இலட்சுமணன், "போனவன் மனைவி இருப்பவனுக்கென்று நினைத்தையோ" என்று கூறிய சீதையின் வாசகத்தை, ஆச்சாரியார் — சீதையுடனேயே அல்லும் பகலும் உலவிய ஆச்சாரியார்-மறந்திருக்கமாட்டார். மாசிலா மங்கையின் வாயிலிருந்து இந்த வார்த்தை வரலாமா? பதிவிரதையின் வாயிலிருந்து பரத்தைமொழி பிறக்கலாமா?

சீதையினுடைய கற்பின் பெருமையை இராமன் காலத்தில்வாழ்ந்த வண்ணான் வெளுத்து வாங்கியிருப்பதை அன்பர் மறந்திருக்கமாட்டார் என நம்புகிறோம்.

அந்த வண்ணான் கூறிய சுடுசொல்லைக் கேட்டுத் தாங்காத இராமன், தான் கணவன் என்ற ஒரே காரணத்தால், கர்ப்பிணி என்று அறிந்திருந்தும், காட்டுக்குத் துரத்துகிறான். அங்கு, அவளுக்குக் குழந்தை ஒன்று பிறக்கிறது. ஏதோ ஒரு காரணத்தால், தர்ப்பையைக் கொண்டு மற்றொரு பிள்ளையும் பிறந்ததாக இராமாயணம் கூறுகிறது.

எந்தச் சந்தேகத்துக்காக சீதை காட்டுக்கு அனுப்பப்பட்டாளோ. அந்தச் சீதை, மேலும் சந்தேகத்துக்கு உள்ளாகும்வண்ணம் இரண்டு குழந்தைகளுக்குத் தாயாகிறாள். இரட்டைக் குழந்தைகளைப் பெற்றாள் என்றாலாவது, நாம் ஒத்துக் கொள்ளலாம்—அது இன்றும்கூட சர்வசாதாரணமாக நடைபெறும் நிகழ்ச்சி. ஆனால், சீதை முதலில் ஒரு குழந்தையைத்தான் ஈன்றெடுத்தாள். முனிவரால், மற்றொரு குழந்தை உண்டாக்கப்படுகிறது.

தர்ப்பை, தனயனுயிற்று என்பது தர்க்கத்துக்கு ஒவ்வாத ஒன்றாகும். இதை எப்படி நாம் ஏற்றுக்கொள்ள முடியும்?

இப்படிப்பட்ட ஐயப்பாடுகளே, சீதை கற்பிழந்தவள் என்று கூறும் நிலைமைக்கு நம்மைக் கொண்டு போய்விடுகிறது. என்றாலும், நாம் அதை, ஆச்சாரியார்போல அவசரப்பட்டுக் கூறவில்லை

பண்பாட்டிற்கும், பக்திக்கும் ஏற்பாடாக இராமாயணத்தைச் செய்து வைத்தார்கள் என்று கூறும் ஆச்சாரியார், அன்றைய ஏற்பாடு, இன்று ஏற்புடையதாகுமா என எண்ணிப் பார்த்தாரா?

ஏற்பாடு நிரந்தரமானதல்லவே. ஏன் அந்தப் பழைய ஏற்பாட்டை இன்று இங்கு திணிக்க இவர் முற்படுகிறார்?

பழைய ஏற்பாட்டையும் பழைய பதிவிரதைத்தன்மையையும் ஏன், ஆச்சாரியார் நமக்கு அறிமுகப் படுத்துகிறார்?

அப்படி, ராமாயண காலத்துக்கு நாட்டை அழைத்துச் சென்றால்தானே; அன்று ஆச்சாரியாரின் இனம் வாழ்ந்ததுபோல் இன்றும் வாழமுடியும் என்ற கருத்தோடா இதனை அவர் சொல்லுகிறார்?

அதற்கு, நாமும் நம்முடைய பிரச்சாரமும் இடையூறாக இருக்கும் காரணத்தால்தான், ஆச்சாரியாருக்கு எப்பொழுதும் நமது கவனமாகவே இருக்கிறது.

அதனால்தான், முதல் எதிரி, பூச்சி, என்று உதாரணங்கள் கூறி, நம்மை எதிர்க்கும்படி மக்களைத் தூண்டிவிடும் மகத்தான பணியில் இறங்கியுள்ளார்.

இப்பொழுதைய அவருடைய நினைப்பெல்லாம் நம்மைப்பற்றித்தானும். எனவே, எப்பொழுதும் அவரது அகக்கண் முன்னால் நாம் தான் தென்படுகிறோம். எனவே, எதையாவது ஒன்றைக் கூறி, நாட்டு மக்களின் உள்ளத்திலிருந்து நம்மை விரட்டும் வேலையை வெகு வேகமாகச் செய்து வருகிறார்.

சீதையைக் கவனப்படுத்தியாவது காரியத்தைச் சாதித்துக் கொள்ளலாம் என்று நினைக்கிறார், பாவம்! அதனாலேயே சீதையின் கற்புக்குச் சாட்சி சொல்ல முனைந்திருக்கிறார். இதனை நாடுஏற்குமா?✱



# ஆச்சாரியாரே! வேண்டாம் விஷம்!!

நாம், எதிர்க்கிறோம்! — அதனால் விட்டுக்கொடுக்கமாட்டாராம்!!

புதியகல்வித் திட்டம் பற்றி, ஆச்சாரியார், அறிவித்துள்ளார்—மேல் சபையில்.

நாம் எதிர்ப்பதற்காக, இந்தத் திட்டத்தை விட்டுவிட்டால், நமது குரலுக்கு அதிகமதிப்பேற்பட்டு விடுமாம். அதனால், இதனைக், கை விடக்கூடாதாம்.

தியாகமூர்த்தி ஆச்சாரியார் செப்பியிருக்கிறார், இவ்வண்ணம்.

*

கல்வித்திட்டம் பிறப்பிக்கப்பட்ட நாள்முதல், நாம் மட்டும்தானா, கூடாதென்கிறோம். விஷயத்தை, வேறுபாதைக்கு ஓட்டிவிடும், 'குதர்க்க வாதத்தை'க் கிளறுகிறார், ஆச்சாரியார். கல்வித் திட்டத்தை, நாமல்ல, எதிர்ப்பது! 'நாடு' எதிர்க்கிறது!!

திராவிட இயக்கம்மட்டுமல்ல எதிர்ப்பது; எல்லா அரசியல் கட்சிகளும்—ஏன்? காங்கிரஸ் கட்சியே கூட! எதிர்க்கின்றது.

'அரசியல் கட்சிகள் மட்டுமா? அவைகளுக்குத்தான் ஆச்சாரியாரைப் பிடிக்காதே!', என்று சொன்னால், இதோ பொது மன்றத்துக்குப் போவோம்.

கல்வித்துறை நிபுணர்கள் கண்டிக்கிறார்கள்.

'டாக்டர் லட்சுமணசாமி போன்றோர் கண்டித்துவிட்டால் போதுமா! அவர், உங்களவர்,' எனலாம்.

அவர்மட்டுமல்ல, காந்தியவாதி, ஏழைகள் வாழத்திட்டம் தீட்டியவர், என்றெல்லாம் கூறப்படும் டாக்டர். ஜே. சி. குமரப்பா, என்ன சொன்னார்? கல்வித்திட்டத்தை வரவேற்றாரா! வாழ்த்துரை வழங்கினாரா!! இல்லை; இல்லை. கண்டித்தார்.

உயர்நிலைப்பள்ளி ஆசிரியர்கள் மாநாடுகள்—ஓரிடத்திலல்ல, பல இடங்களில் கூடி, 'வேண்டாம்,' என்று வேண்டுகோள் விடுத்திருக்கிறார்கள். அவர்கள், யார்? திராவிட இயக்கத்தினரா!!

டி. டி. கிருஷ்ணமாச்சாரியார் — காங்கிரஸ் மந்திரி. அவர், கடந்த சில நாட்களுக்குமுன், ஆச்சாரியார் கல்வித்திட்டத்தைப் பற்றி சொல்லியதென்ன? மிகமிகக் கண்டித்திருக்கிறார்.

டாக்டர் சுப்பராயன் — ஆச்சாரியார் போக போக்கியம் பெறுவதற்கான, ஏணி, என்பார்கள் இவரை. அவர், என்ன சொன்னார்?

ஓமந்தூர் ராமசாமி—உத்தமர் என்பர். கிராமத்திலேயேவாழ்பவர், என்பர். அவர் கல்வித்திட்டம் பிறந்த நாள் முதல், என்ன கூறி வருகிறார்?

காமராஜர்—திராவிட இயக்கத்தவரா?—கசடனும் கூறான். அவரும், அவரைத் தலைவராகக் கொண்டிருக்கும் காங்கிரஸ் கட்சியும், ஆச்சாரியாரின் திட்டம் கண்டு, பூரிப்பு முழக்கமா, செய்கிறது?

இதோ, அண்மையில்பிரிந்தஆந்திரத்தில், ஆச்சாரியாரின் 'அதிவிவேகத்திட்டம்' தூள்தூளாகப் போகிறது.

அதே முடிவைத்தான், சென்னை சட்டசபை உறுப்பினரும் செய்தார்கள்—'வேண்டாம்— நிறுத்திவை!' என்று முடிவுசெய்தார்கள்.

இதையெல்லாம் மக்கள் மறந்துவிட்டார்கள் என்ற நினைப்பில், மேல்சபையில், கூறியிருக்கிறார் — திராவிட இயக்கத்தார் மட்டுமே இக்கிளர்ச்சியிலிறங்கியிருப்பதாக!

திராவிட இயக்கம் என்றால், அதற்கும் இந்தநாட்டு மக்கள் வாழ்வுக்கும் தொடர்பு கிடையாதென்பதா, ஆச்சாரியார் எண்ணம்! அப்படியும், இந்தக் கல்வித்திட்டத்தை எதிர்க்குமுன், திடீரென்று கிளம்பிற்று, தி. மு. க.

நாடெங்கும் கண்டனக் கூட்டங்கள்.

மக்களின் மகஜர்

M. L. A-க்களிடம், தூது.

ஆச்சாரியார் எனும் அட்டகாசபிம்பம் ஆட்சியில் அமர்ந்திருக்கிறது—அதை அழிக்க இந்தக் கல்வித்திட்டமே தக்க தருணம்—என்று தி. மு. க. கருதியிருந்தால், இத்தனை முன்னேற்பாடுகளும், ஏன்? அப்படி ஆச்சாரியார் போய், இன்னொருவர் வந்தாலும், அவர் மட்டுமென்ன, தி. மு. க. சொல்வதையெல்லாம் ஏற்றுக்கொள்ளக் கூடியவராகவா, வருவார்! ஆச்சாரியார்போய் முத்தையாவந்தாலும், முத்தன்போய் மூக்கன் வந்தாலும், தி. மு. கவுக்கு, என்னலாபம்?

கல்வித்திட்டம் —கேடு விளைவிப்பது, கிராமத்து மக்களை வாழமுடியாதவர்களாக்குவது, என்பது தெரிந்த ஒரே காரணத்தால்தான் நாம் எதிர்த்தோம்—எதிர்க்கிறோம்.

இந்த எதிர்ப்புக்கு, மாசு கற்பிக்கிறார்! 'மனு'தாங்கி! நாட்டின் நாடியே அறியாதவர்போல் 'பேசுகிறார்!!

*

"திராவிடரியக்கம் —கம்யூனிஸ்டு —காங்கிரஸ்—எல்லாம், இந்தக் கல்வித்திட்டத்தை, எதிர்க்கலாம். ஏனெனில், அவர்களுக்கெல்லாம்,

கையும் சேர்த்து, கவி பாடி வைத்தான்—கம்பன்.

எனவே, வால்மீகியின் உருவகப்படி இராமனே இராவணனே இருந்திருந்தாலும், கம்பன் உருவகப்படி இராமனே இராவணனே இருந்திருந்தாலும்—நமக்குக் கவலை இல்லை.

தேவாம்சம் பெற்ற இராமன், சூர்ப்பனகையைப் பங்கம் செய்யச் சொன்னது போற்றத்தக்கதென்றும், தங்கையை மான பங்கம் செய்தவனின் மனைவியை இராவணன் சிறை எடுத்தது இகழத்தக்கது என்றும் இவர் செப்புகிறார்.

சீதையைத் தூக்கிக்கொண்டு போனது எவ்வளவு நல்ல காரியம் என்று கேலிமொழி பேசும் இவர், சூர்ப்பனகையை பங்கம் செய்தது எவ்வளவு நல்ல காரியம் என்பதை எண்ணிப் பார்த்தாரா? நீதி இருவருக்கும் பொதுதானே?

இராமன், தன் துணைவலிக்காக, விபீடணனைத் துணைக்கொண்டது எவ்வளவு இழிவான செயல்? விபீடணன்புரிந்த பாதகமும் எத்தகையது?

இன்றும், விபீடணனைப்போன்ற செயல்புரிந்த மாணிக்கவேலர்களையும், அப்படிப்பட்ட விபீடணர்களின் துணைவலியாலேயே நாட்டை ஆளும் ஆச்சாரியாரையும் நாம் எப்படிப் போற்றமுடியும்?

அண்ணனுக்குத் தம்பி துரோகம் விளைவிக்க கூடாது, என்று நீதி போதித்து, விபீடணனை அனுப்பி விட்டிருக்கலாமே, இராமன்! செய்தானா? ஏன் செய்யவில்லை? அப்படிப்பட்டவனை நேர்மையுள்ளவன் என்று எப்படி ஏற்றுக்கொள்ள முடியும்.

அதேபோல், இன்றும், மாணிக்கவேலர்களை, ஒரு கட்சியின் பெயரைக் கூறி ஓட் பெற்றுவிட்டு மற்றொரு கட்சிக்கு மாறுவது, பெருந் துரோகம் என்று கூறி ஆச்சாரியார் அனுப்பியிருக்கலாமே!

இவருடைய செயலும் இராமனது செயலும் இணைந்து இருப்பதாலேயே, இராமனை இவர்போற்றுகிறார் என்று நாம் கூறுவதில் என்ன தவறு காணமுடியும்?

அதுமட்டுமல்லாமல், 'சீதையை பதிவிரதை அல்ல என்று தாங்கள் பார்த்ததுபோல் சொல்லுகிறார்கள்' என்று கூறும் இவர், சீதையின் அந்தரங்கத் தோழியாக இருந்து, அவளுடைய பதிவிரதைத் தன்மைக்கு சாட்சி கூற வந்திருக்கிறாரே, இவர், சீதையின் பதிவிரதத் தன்மையை நிரூபிக்கமுடியுமா?

சீதை கற்புடைய மங்கை என்று கூறும் இவருக்கு, சீதையின் ஒரு வாசகத்தை நினைவுக்குக் கொண்டுவர விரும்புகிறோம்.

மானைத் துரத்திச் சென்ற இராமனை, தேடிப் பார்த்து வா என்று சீதை இலட்சுமணனிடம் சொன்னாள். மறுத்தான், இலட்சுமணன், "போனவன் மனைவி இருப்பவனுக்கென்று நினைத்தையோ" என்று கூறிய சீதையின் வாசகத்தை, ஆச்சாரியார் — சீதையுடனேயே அல்லும் பகலும் உலவிய ஆச்சாரியார்-மறந்திருக்கமாட்டார். மாசிலா மங்கையின் வாயிலிருந்து இந்த வார்த்தை வரலாமா? பதிவிரதையின் வாயிலிருந்து பாத்தைமொழி பிறக்கலாமா?

சீதையினுடைய கற்பின் பெருமையை இராமன் காலத்தில்வாழ்ந்த வண்ணான் வெளுத்து வாங்கியிருப்பதை அன்பர் மறந்திருக்கமாட்டார் என நம்புகிறோம்.

அந்த வண்ணான் கூறிய சுடுசொல்லைக் கேட்டுத் தாங்காத இராமன், தான் கணவன் என்ற ஒரே காரணத்தால், கர்ப்பிணி என்று அறிந்திருந்தும், காட்டுக்குத் துரத்துகிறான். அங்கு, அவளுக்குக் குழந்தை ஒன்று பிறக்கிறது. ஏதோ ஒரு காரணத்தால், தர்ப்பையைக் கொண்டு மற்றொரு பிள்ளையும் பிறந்ததாக இராமாயணம் கூறுகிறது.

எந்தச் சந்தேகத்துக்காக சீதை காட்டுக்கு அனுப்பப்பட்டாளோ. அந்தச் சீதை, மேலும் சந்தேகத்துக்கு உள்ளாகும்வண்ணம் இரண்டு குழந்தைகளுக்குத் தாயாராகிறாள். இரட்டைக் குழந்தைகளைப் பெற்றாள் என்றாலாவது, நாம் ஒத்துக் கொள்ளலாம்—அது இன்றும்கூட சர்வசாதாரணமாக நடைபெறும் நிகழ்ச்சி. ஆனால், சீதை முதலில் ஒரு குழந்தையைத்தான் ஈன்றெடுத்தாள். முனிவரால், மற்றொரு குழந்தை உண்டாக்கப்படுகிறது.

தர்ப்பை, தனயனுயிற்று என்பது தர்க்கத்துக்கு ஒவ்வாத ஒன்றாகும். இதை எப்படி நாம் ஏற்றுக்கொள்ள முடியும்?

இப்படிப்பட்ட ஐயப்பாடுகளே, சீதை கற்பிழந்தவள் என்று கூறும் நிலைமைக்கு நம்மைக் கொண்டு போய்விடுகிறது. என்றாலும், நாம் அதை, ஆச்சாரியார்போல அவசரப்பட்டுக் கூறவில்லை.

பண்பாட்டிற்கும், பக்திக்கும் ஏற்பாடாக இராமாயணத்தைச் செய்து வைத்தார்கள் என்று கூறும் ஆச்சாரியார், அன்றைய ஏற்பாடு, இன்று ஏற்புடையதாகுமா என எண்ணிப் பார்த்தாரா?

ஏற்பாடு நிரந்தரமானதல்லவே. ஏன் அந்தப் பழைய ஏற்பாட்டை இன்று இங்கு திணிக்க இவர் முற்படுகிறார்?

பழைய ஏற்பாட்டையும் பழைய பதிவிரதைத்தன்மையையும் ஏன், ஆச்சாரியார் நமக்கு அறிமுகப்படுத்துகிறார்?

அப்படி, ராமாயண காலத்துக்கு நாட்டை அழைத்துச் சென்றால் தானே; அன்று ஆச்சாரியாரின் இனம் வாழ்ந்ததுபோல் இன்றும் வாழமுடியும் என்ற கருத்தோடு இதனை அவர் சொல்லுகிறார்?

அதற்கு, நாமும் நம்முடைய பிரச்சாரமும் இடையூறாக இருக்கும் காரணத்தால்தான், ஆச்சாரியாருக்கு எப்பொழுதும் நமது கவனமாகவே இருக்கிறது.

அதனால்தான், முதல் எதிரி, பூச்சி, என்று உதாரணங்கள் கூறி, நம்மை எதிர்க்கும்படி மக்களைத் தூண்டிவிடும் மகத்தான பணியில் இறங்கியுள்ளார்.

இப்பொழுதைய அவருடைய நினைப்பெல்லாம் நம்மைப்பற்றித் தானும். எனவே, எப்பொழுதும் அவரது அகக்கண் முன்னால் நாம் தான் தென்படுகிறோம். எனவே, எதையாவது ஒன்றைக் கூறி, நாட்டு மக்களின் உள்ளத்தில் நம்மை விரட்டும் வேலையை வெகு வேகமாகச் செய்து வருகிறார்.

சீதையைக் கவனப்படுத்தியாவது காரியத்தைச் சாதித்துக் கொள்ளலாம் என்று நினைக்கிறார், பாவம்! அதனாலேயே சீதையின் கற்புக்குச் சாட்சி சொல்ல முனைந்திருக்கிறார். இதனை நாடேற்குமா?



# ஆச்சாரியாரே!

# வேண்டாம் விஷம்!!

நாம், எதிர்க்கிறோம்! — அதனால் விட்டுக்கொடுக்கமாட்டாராம்!!

புதியகல்வித் திட்டம் பற்றி, ஆச்சாரியார், அறிவித்துள்ளார்—மேல் சபையில்.

நாம் எதிர்ப்பதற்காக, இந்தத் திட்டத்தை விட்டுவிட்டால், நமது குரலுக்கு அதிகமதிப்பேற்பட்டு விடுமாம். அதனால், இதனைக், கைவிடக்கூடாதாம்.

தியாகமூர்த்தி ஆச்சாரியார் செப்பியிருக்கிறார், இவ்வண்ணம்.

*

கல்வித்திட்டம் பிறப்பிக்கப்பட்ட நாள்முதல், நாம் மட்டும்தானா, கூடாதென்கிறோம். விஷயத்தை, வேறுபாதைக்கு ஓட்டிவிடும், 'குதர்க்க வாதத்தை'க் கிளறுகிறார், ஆச்சாரியார். கல்வித் திட்டத்தை, நாமல்ல, எதிர்ப்பது! 'நாடு' எதிர்க்கிறது!!

திராவிட இயக்கம்மட்டுமல்ல எதிர்ப்பது; எல்லா அரசியல் கட்சிகளும்—ஏன்? காங்கிரஸ் கட்சியே கூட! எதிர்க்கின்றது.

'அரசியல் கட்சிகள் மட்டுமா? அவைகளுக்குத்தான் ஆச்சாரியாரைப் பிடிக்காதே!', என்று சொன்னால், இதோ பொது மன்றத்துக்குப் போவோம்.

கல்வித்துறை நிபுணர்கள் கண்டிக்கிறார்கள்.

'டாக்டர் லட்சுமணசாமி போன்றோர் கண்டித்துவிட்டால் போதுமா! அவர், உங்களவர்,' என லாம்.

அவர்மட்டுமல்ல, காந்தியவாதி, ஏழைகள் வாழத்திட்டம் தீட்டியவர், என்றெல்லாம் கூறப்படும் டாக்டர். ஜே. சி. குமரப்பா, என்ன சொன்னார்? கல்வித்திட்டத்தை வரவேற்றாரா! வாழ்த்துரை வழங்கினாரா!! இல்லை; இல்லை. கண்டித்தார்.

உயர்நிலைப்பள்ளி ஆசிரியர்கள் மாநாடுகள்—ஓரிடத்திலல்ல, பல இடங்களில் கூடி, 'வேண்டாம்,' என்று வேண்டுகோள் விடுத்திருக்கிறார்கள். அவர்கள், யார்? திராவிட இயக்கத்தினரா!!

டி. டி. கிருஷ்ணமாச்சாரியார் — காங்கிரஸ் மந்திரி. அவர், கடந்த சில நாட்களுக்குமுன், ஆச்சாரியார் கல்வித்திட்டத்தைப் பற்றி சொல்லியதென்ன? மிகமிகக் கண்டித்திருக்கிறார்.

டாக்டர் சுப்பராயன் — ஆச்சாரியார் போக போக்கியம் பெறுவதற்கான, ஏணி, என்பார்கள் இவரை. அவர், என்ன சொன்னார்?

ஓமந்தூர் ராமசாமி—உத்தமர், என்பர். கிராமத்திலேயேவாழ்பவர், என்பர். அவர் கல்வித் திட்டம் பிறந்த நாள் முதல், என்ன கூறி வருகிறார்?

காமராஜர்—திராவிட இயக்கத்தவரா?—கசடனும் கூறான். அவரும், அவரைத் தலைவராகக் கொண்டிருக்கும் காங்கிரஸ் கட்சியும், ஆச்சாரியாரின் திட்டம் கண்டு, பூரிப்பு முழக்கமா, செய்கிறது?

இதோ, அண்மையில்பிரிந்தஆந்திரத்தில், ஆச்சாரியாரின் 'அதிவிவேகத்திட்டம்' தூள்தூளாகப் போகிறது.

அதே முடிவைத்தான், சென்னை சட்டசபை உறுப்பினரும் செய்தார்கள்—'வேண்டாம்— நிறுத்திவை!' என்று முடிவுசெய்தார்கள்.

இதையெல்லாம் மக்கள் மறந்துவிட்டார்கள் என்ற நினைப்பில், மேல்சபையில், கூறியிருக்கிறார் — திராவிட இயக்கத்தார் மட்டுமே, இக்கிளர்ச்சியிலிறங்கியிருப்பதாக!

திராவிட இயக்கம் என்றால், அதற்கும் இந்நாட்டு மக்கள் வாழ்வுக்கும் தொடர்பு கிடையாதென்பதா, ஆச்சாரியார் எண்ணம்! அப்படியும், இந்தக் கல்வித்திட்டத்தை எதிர்க்குமுன், திடீரென்று கிளம்பிற்று, தி. மு. க.

நாடெங்கும் கண்டனக் கூட்டங்கள்.

மக்களின் மகஜர்

M. L. A-க்களிடம், தூது.

ஆச்சாரியார் எனும் அட்டகாசபிம்பம் ஆட்சியில் அமர்ந்திருக்கிறது—அதை அழிக்க இந்தக் கல்வித்திட்டமே தக்க தருணம்—என்று தி. மு. க. கருதியிருந்தால், இத்தனை முன்னேற்பாடுகளும், ஏன்? அப்படி ஆச்சாரியார் போய், இன்னொருவர் வந்தாலும், அவர் பட்டுமென்ன, தி. மு. க. சொல்வதையெல்லாம் ஏற்றுக்கொள்ளக் கூடியவராகவா, வருவார்! ஆச்சாரியார்போய் முத்தையாவந்தாலும், முத்தன்போய் மூக்கன் வந்தாலும், தி. மு. கவுக்கு, என்னலாபம்?

கல்வித்திட்டம்—கேடு விளைவிப்பது, கிராமத்து மக்களை வாழமுடியாதவர்களாக்குவது, என்பது தெரிந்த ஒரே காரணத்தால்தான் நாம் எதிர்த்தோம்—எதிர்க்கிறோம்.

இந்த எதிர்ப்புக்கு, மாசு கற்பிக்கிறார்! 'மனு'தாங்கி! நாட்டின் நாடியே அறியாதவர்போல் 'பேசுகிறார்!!

*

"திராவிடரியக்கம்—கம்யூனிஸ்டு—காங்கிரஸ்—எல்லாம், இந்தக் கல்வித்திட்டத்தை, எதிர்க்கலாம். ஏனெனில், அவர்களுக்கெல்லாம்,

என்னைப் பிடிக்காது. அவர்கள் மட்டும்தானா, நாடு? நாடு என்பது மக்கள் கூட்டம்! அந்த மக்கள், இந்தக் கட்சிகளில் மட்டுமில்லை—கட்சிகளில் சேராத அவர்கள் ஆதரவு எனக்கு என்றும் உண்டு'' என்றெல்லாம், கூறினர், ஆச்சாரியார்.

அவர், கூறிய 'மக்கள்' என்ன தீர்ப்பு வழங்கினர்கள்? ஆச்சாரியார் கொண்டுவந்த புதுக்கல்வித்திட்டத்தின் அடிப்படையில்தான், விருத்தாசலத்திலும், காங்கேயத்திலும், உபதேர்தல்கள் நடைபெற்றன. மக்கள் வழங்கிய தீர்ப்பென்ன? ஆளும் கட்சியாம் காங்கிரசின் பிரதிநிதிகள் தோற்கடிக்கப்பட்டார்கள்! அவர்கள் தோற்றதற்குள்ள காரணத்தைக் கேட்டபொழுது, காங்கிரஸ் பிரமுகர்களே கூறினர்கள்—புதுக் கல்வித் திட்டம்தான், தோல்விக்குக் காரணமென்று.

ஏற்றாரா, இந்தமக்கள் மன்றத்தின் தீர்ப்பை?

கடந்த திங்களில், சென்னையில் கிராமப் பஞ்சாயத்துப் பிரதிநிதிகளின் மாநாடு, நடைபெற்றது. அவர்களை, மக்களின் தூதர்கள்—நாட்டின் நரம்புகள்—என்றெல்லாம், மாநாட்டில் பேசிய கவர்னர், வர்ணித்தார். அவர்கள், ஆச்சாரியாரின் கல்வித்திட்டம்பற்றி, தந்த தீர்ப்பென்ன? ஆச்சாரியாரின் அத்யந்த சிஷ்யர், கல்வி ஆலோசகர், ராமச்சந்திரனுக்கல்லவா, தெரியும், அன்று பட்டபாடு!

தேர்தல், பஞ்சாயத்துக்களின்—தீர்ப்பு இவைகளைவிட, மக்கள்மன்றத்தின் முடிவைத் தெரிந்துகொள்வதற்கு, வேறு என்ன வேண்டும்?

இவ்வளவு 'தீர்ப்பும்' வெளியாகிவிட்டது— எனினும் கூறுகிறார், ஆச்சாரியார், 'கல்வித்திட்டம்பற்றி மக்கள் என்ன கருதுகிறார்கள் என்பதைச் சரிவரத் தெரிந்து கொள்ள முடியவில்லை, என்னால். நான் எங்கு சென்றாலும், என்னைச் சுற்றி ஜனங்கள், மொய்த்துக் கொண்டு விடுகிறார்கள்'' என்பதாக. ஆட்சியினர் சட்டம் போட்டுவிட்டு, அது பற்றி மக்கள் என்ன கருதுகிறார்கள் என்பதை அறிய மாறுவேடம் போட்டுக்கொண்டுபோகவேண்டிய, 'விக்ரமாதித்தன்' காலமா, இது?

ஏடுகள்! பிரதிநிதிகள்!!—இத்தனையும், இருக்கின்றனவே, நாட்டின் நாடியை அறிய.

அந்த நாடிகள் அனைத்தும், அவரது திட்டத்தைக் கண்டிப்பது கண்டதும், போகாத ஊருக்கு வழிதேடுகிறார்! என்னென்னமோ, பேசுகிறார்!! 'திராவிட இயக்கத்தினர் கூப்பாட்டுக்குப் பணிந்துவிட்டால், ஓட ஓடத் துரத்துவார்கள். இதனை என் நண்பர் ஓமந்தூர் ராமசாமி அவர்கள் எண்ண வேண்டும்' என்று, மேல் சபையில், பேசியிருக்கிறார்.

இந்தக் கூற்றை எடுத்து அலசிப் பார்க்கவேண்டிய அவசியமில்லை. அடிப்பீடமே, அசம்பாவிதமானது!

கூப்பாட்டுக்குப் பணியவில்லை! என்ற, அரசியல வாழ்வின் இராசியப் போக்கை, வெளிப் படுத்தமுனைகிறாரே, இந்த வீராதிவீரர், அவரைக் கேட்க விரும்புகிறோம்—''அன்பரே! ஆச்சாரியாரே!! எதிர்க்கட்சியின் கூப்பாட்டுக்கு, அஞ்சக்கூடாது—என்கிறீரே. புதியக்கல்வித்திட்டம்பற்றி, திருவான்மியூரில் நீர் செப்பியதென்ன? ஒவ்வொருவனும் அவனவனுடைய தகப்பன் தொழிலையேசெய்யவேண்டும்—என்று, கூறினீரே! இப்போது, அப்படியா, கூறுகிறீர்? இதனை வர்ணாசிரம முறைத் திட்டம், என்றீரே! இப்போது, அவ்விதம்கூறத் தைரியம் உண்டா? குலத்தொழில்—வர்ணாசிரமம்— எல்லாம் போய் 'கன்னன் மகன் கவர்னராகலாம்!', என்றன்றோ, நீரும் உமது சிஷ்ய கோடிகளும் பேச ஆரம்பித்திருக்கிறீர்கள்! இதற்கென்னபெயர்! திராவிட இயக்கத்தின் கூப்பாட்டுக்கு, நீர், அஞ்சாத அழகா, இது!!

ஆச்சாரியார், தஞ்சாவூர் பொம்மைபோல, தள்ளாடுகிறார். தான் கீழே விழாமலிருக்க வேண்டுமென்பதற்காக, என்னென்னவோ, கூறுகிறார். இப்போது, திராவிட இயக்கம், ஒன்று மட்டுமே இவருடைய கல்வித் திட்டத்தை எதிர்ப்பது போலவும், ஏனையோரெல்லாம் இவரது கல்வித்திட்டத்தை ஆதரிப்பது போலவும் காட்டிக் கொள்ள முனைகிறார்!!

அவருடைய முயற்சிகளையும், மூர்க்கத்தனமான போக்கையும் எண்ணும் பொழுது ஆச்சாரியாரின் உருவில் இந்த நாட்டைக் கப்பிக் கொண்டுள்ள ஆபத்தின் உருவம் தெரிகிறது!

ஜெர்மனியிலிருந்த ஹிட்லர்— இத்தாலியின் முசோலினி—இவர்களையெல்லாம் மிஞ்சக்கூடிய உருவமாக இருக்கிறது! அதனால்தான், இவ்விதமெல்லாம், பேசுகிறார்!!

முன்னுக்குப் பின் முரணாகவும், ஒரு கட்சியைத்தூண்டி விட்டு மற்றோர் கட்சியின் ஆதரவைப் பெறவும், அவர் செய்து வரும் சாகசச் செயல்கள், பல.

அதனால் தான், மேல் சபையில், எல்லோருடைய கவனத்தையும் நம்மீது திருப்பியிருக்கிறார்!

ஆச்சாரியாரின், நிலைமைக்கு இரங்குகிறோம். மதோன் மத்தக் குரலில், அவர்கள் கூப்பாட்டுக்கு, செவிசாய்க்கமுடியாது என்கிறாரே—இதுபோலத்தான் அன்றோர் நாள், தாலமுத்துவும் நடராசனும் தமிழுக்காக உயிரைத்தத்தம் செய்தபோதிலும், எக்காளமிட்டார். நடந்தது, என்ன? நாம்தான் வென்றோம்! அவர்தோற்றார்!!

காரணம், திராவிட இயக்கம், மக்களின் மனக்குரலை எதிரொலிப்பது. நாட்டின் எதிர்காலவாழ்வைப் பற்றி, எங்கேயும், சிந்திப்பது.

இதனாலேயே, ஆச்சாரியார் கண்ணில், நாட்டு மக்களின் நன்மை குறித்து யார்பேசினாலும் அவர்கள், திராவிட இயக்கத்தாராகவே தென்படுகிறார்கள். அதனாலேயே, பொதுப்பிரச்னையான கல்வி விஷயத்தில், எல்லோரும் எரிச்சல் கொண்டிருந்தாலும், நம்மைப் பற்றிய எண்ணமே, அவர் கவனத்திலிருக்கிறது. அதனாலேயே, இப்படியெல்லாம், பேசுகிறார்.

நம்மைப்பற்றி நினைப்பதே ஆகாதெனும் மமதையில் உலவிய 'மனுதாங்கி' நமக்காக, நாட்டுவாழ்வின் சுகதுக்கத்தைக்கூட, பொருட்படுத்தப்போவதில்லை, என்கிறார்.

தான், நாட்டின், அமைச்சர்!—என்பதை மறந்து, ராஜகோபாலாச்சாரியாகவே, இருக்கவிரும்புகிறார்.

தனக்கு இழுக்கு ஏற்படாமலிருப்பது முக்கியமே யொழிய, நாட்டின் எதிர்காலம் எப்படிப்போனாலும்



கவலையில்லையென்பதை, 'ஓடஓடத் துரத்துவார்கள்' என்று கூறுவதன் வாயிலாக மெய்ப்பிக்கிறார்.

உறுதி கூறுகிறோம்—ஓடஓடத் துரத்தும் அவசியம் நமக்கில்லை! அவர் கருதுவதுபோல, இந்த ஆச்சாரியார்மீது தனிப்பட்டகுரோதம், எதுவுமில்லை. இருந்தால், அவர் கைத்தறித் துணியை ஆதரிக்கிறார் என்பதற்காகநாம் எதிர்க்கவேண்டும்—செய்யவில்லை! நாட்டுக்கு நன்மை தரக்கூடிய, எதையும், யார்செய்தாலும் அங்கீகரிக்கத் தயாராயிருக்கிறது, தி. மு. கழகம்.

தன்னுடைய, 'பித்தாப்பை'ப் பெரிதெனமதியாமல் நாட்டுவாழ்வை மனதில் எண்ணும்படி, அன்பர் ஆச்சாரியாரைக் கேட்டுக்கொள்ளுகிறோம்.

அவரது கல்வித்திட்டம், இருட்குகைக்கு, இந்நாட்டு இனம் மலர்களை இழுத்துச்செல்லக்கூடிய திட்டம். அதனால்தான், இவ்வளவு தூரம், எல்லோரும் எதிர்க்கிறார்கள்.

நாட்டு வாழ்வே நம்முடைய வாழ்வெனக் கருதிக்கொண்டிருக்கும் நாமும் எதிர்க்கிறோம். இந்த எதிர்ப்பை, அன்பர் ஆச்சாரியார் ஏளனமாகக் கருதியதாலேயே சென்னையில் அறப்போர், துவக்கினோம். அடி! உதை! காயம்! சிறை! அனைத்தையும் தாங்கிக்கொண்டோம். எனினும், இவரது போக்கு மாறவில்லை — இப்போது, மேற்படி திட்டத்தை நகரங்களுக்கும் அமுல் நடத்த ஆலோசனை செய்துகொண்டிருப்பதாகக் கூறப்படுகிறது. இந்தப் போக்கை, தி. மு. க. சகிக்காதென்பதை, தெரிவித்துக்கொள்ளுகிறோம்.

இதனாலேயே, அண்மையில் திருச்சியில் கூடிய பொதுக்குழு, முக்கியமான தீர்மானம் ஒன்றைச் செய்திருக்கிறது — தீர்மானத்தைச் செய்யவேண்டுமென, எல்லா மாவட்டங்களிலுமிருந்து வந்தோரெல்லாம், புயல் போலப் பேசினர்கள். துயரங்கள் பலமோதினாலும், துடுக்கடக்கத்தயார்!—எனும், வீரக்குரல் கேட்டது, பொதுக்குழுவில். அதற்குப்பின் நிறைவேற்றப்பட்ட, தீர்மானம், இது:-

(அ) புதிய ஆரம்பக் கல்வித் திட்டம் சிறிதளவும்பலன் தராது என்பதுமட்டுமல்ல. நாட்டின்தரத்தையும், பொருளாதார வளர்ச்சியையும், மாணவர்களின் எதிர்கால வாழ்வையும் பாழ்படுத்தக்கூடியதுமாகும் என்பதை, கழகத்தார் பலவழிகளில் சுட்டிக் காட்டியிருந்தும், அரசியல் தலைவர்கள்—கல்வி வல்லுநர்கள்—ஆசிரியர்கள்—பெற்றோர்கள்—சட்டமன்ற உறுப்பினர்கள்— பஞ்சாயத்துத் தலைவர்கள் ஆகியோர் தங்கள் எதிர்ப்பைத் தெரிவித்திருந்தும், கண் துடைப்பு வேலையாக அமைத்த பருளேக்கர்குழுக் கூடகுறைபாடுகளைச் சுட்டிக்காட்டியிருந்தும், புதிய ஆரம்பக் கல்வித் திட்டத்தைக் கைவிடாமல், சென்னை அரசியலார் வீண்பிடிவாதம் செய்து வருவதை இப்பொதுக்குழு வன்மையாகக் கண்டிக்கிறது.

(ஆ) புதிய ஆரம்பக்கல்வித் திட்டத்தைச் சிற்றூர்களிலும், பேரூர்களிலும் புகுத்தி அவற்றைப் பாழ்படுத்தியதோடு, நகரங்களையும் பாழாக்கும் முறையில் அதனை, இனி நகரங்களிலும் நடைமுறைக்குக் கொண்டுவரும் முயற்சி நிறைவேற்றப்படுமானல் திட்டம் உறுதியாகத் தோல்வியுறும் என்று எச்சரிக்கை செய்வதோடு, பெரும் அறவழி எதிர்ப்பை நேர்நிறுத்திப்பார்க்க வேண்டிய அவசியமும் ஏற்படும் என்றும், சென்னை அரசியலார்க்குத் திராவிட முன்னேற்றக் கழகம் இப்பொதுக்குழுவின் மூலம் எச்சரிக்க விரும்புகிறது.

(இ) ஆச்சாரியார் கல்வித் திட்ட ஒழிப்பு, கல்லக்குடிப் போராட்டம் ஆகியவை பற்றி மேற்கொண்டு நடவடிக்கைகள் எடுக்கவும், தேவைப்படும்போது முற்போக்குக் கட்சிகள் எடுக்கும் நடவடிக்கைகளில் கலந்து கொள்ள வழிவகை செய்யவும் பொதுச் செயலாளருக்கு இப்பொதுக் குழு தனியுரிமைவழங்குகிறது.

எச்சரிக்கை விட்டதோடன்றி, என்ன செய்வதென்பதைப் பற்றியும், தி. மு. க. முடிவு செய்திருக்கிறது.

அந்த முடிவுக்குநம்மை ஆளாக்கி, நமது பிணங்களைக் கண்டபின்தான், ஆச்சாரியார் மனமிரங்குமா! அதுவரை, 'தலைகௌரவம்' பற்றியே பேசிக்கொண்டிருப்பாரா!! — என்பதைக் காணவேண்டிய சந்தர்ப்பம், நெருங்கிக் கொண்டிருக்கிறது. தோழர்காள்! தயாராயிருங்கள். ✿

## 'தெரியாமல்........!'

'தெரியாமல் செய்தபிழை!'— என்று செப்பியிருக்கிறார் அவர். பிரிஜ்லால்பியானி—மத்யபிரதேசத்தின் நிதிமந்திரி. அவர்தான் அவ்வண்ணம், கூறியிருக்கிறார். கூறிய இடம், சட்டசபை.

சபைக்கு சமர்ப்பிக்குமுன்னமே, அவரது 'பட்ஜட்', நண்பர்களுக்கெல்லாம் கூறப்பட்டதாம்.

'பட்ஜட் இரகசியம்'—என்பது, மிகமிகக் கவனிக்கப்படவேண்டிய, இரகசியம். சர்க்கார் அந்த ஆண்டு செய்யப்போகிற காரியங்கள் முன் கூட்டியே வெளியாகிவிட்டால், வியாபாரிகளும், பணம்படைத்தோரும், பிறரும் சர்க்காரை அந்த ஆண்டில் ஏமாற்றுவதற்கான வழிவகைகளைச் செய்துகொள்வார்கள்.

அதனாலேயே 'பட்ஜட்' விஷயங்கள் பரம இரகசியமாக இருக்க வேண்டுமென்பர்.

இந்த இரகசியத்தைக்காப்பாற்றத் தெரியாத எந்த மந்திரியும், உடனே பதவியை விட்டுவிலகிவிடவேண்டும்!

இதுபோல இங்கிலாந்து மண்ணில் பலமுறைநடைபெற்றுள்ளது. இரகசியம் வெளியாகிவிட்டதெனத் தெரிந்தால், உடனே தனது பதவியைவிட்டு, விலகிவிடுவார் நிதிமந்திரி!

இங்கோ, காங்கிரஸ் அமைச்சர், 'தெரியாமல் செய்த பிழை,' என்கிறார். பட்ஜட், சபையில் சமர்ப்பிக்கப்படுமுன், தம்முடைய சொந்தக்காரர்களிடம், அது பற்றிய விபரங்களை யெல்லாம் கூறினாராம் அமைச்சர்!

கடமையைச் சரிவரச் செய்யவில்லை—என்பது, வெளிப்பட்டுவிட்டது. உடனே, வெளியேறி விட வேண்டுவதுதான், அரசியல்நாகரீகம். ஆனால்; இவர், பல்லிளிக்கிறார்! 'தெரியாமல்செய்துவிட்டேன்,' என்கிறார்!! அவர் ஒரு காங்கிரஸ், அமைச்சர். ✿

### வாழ்த்தும் வணக்கமும்

தாயகத்தின் விடுதலைக்காக, மழலையின் மொழியையும் மனைவியின் காதலையும் மறந்து, பெற்றோரிடம் விடைபெற்ற வண்ணம், அறப்போரிலீடுபட்டு, ஆளவந்தாரின் வெறியாட்டத்துக்கு இரையாகி, சிறைச்சாலைக்குள்ளே கிடக்கும், தாயகத்தின் கண்மணிகளாம் நம்முடைய சகோதரர்களுக்கு, நம்முடைய வாழ்த்துதலையும் வணக்கங்களையும் தெரிவித்துக் கொள்கிறோம். வாழ்க, வீரர்கள்! ஒழிக அடக்குமுறை!!

---

# திராவிட நாடு

காஞ்சி] 21—3—54 [ஞாயிறு

## 'கொட்டு முரசே!'



பட்டியல் தந்தனர்!—ஆனந்தமும் ஆர்வமும் போட்டியிட ஒவ்வொரு மாவட்டத் தோழர்களும், தாம் ஆற்றிய பணிகளை எடுத்துரைத்தனர்.

இடியும் புயலும் தாங்கி, 5000 தோழர்களை வெஞ்சிறைக்குஆளாக்கி விட்டு, அறுவரை 'சாவு' தந்து விட்டு, பலரை நடமாடும் 'உடல்' களாகக்காணும் கோர நிகழ்ச்சியைக்கண்டவண்ணம், வழக்கும் தண்டனையுமாக, வாதைப்படும் தோழர்கள், எப்படி இந்தப்பட்டியலைத் தயாரித்தனர்! அதனைப் பரமானந்தத்தோடு, தருகின்றனர்!!—என்று எண்ணிற்று, உள்ளம்.

திருச்சி சங்கரன் பூங்காவிலே கூடிய திராவிடமுன்னேற்றக் கழகப் பொதுக்குழு முன், அறப்போரின் விளைவாக தாங்கள் அடைந்த அல்லல்களையும்—அனுப்பிவைத்தவீரர்களின் விபரங்களையும் மட்டுமே, எல்லோரும் தெரிவிப்பார்கள்—அந்தப் பட்டியல்மட்டுமே, கிடைக்கும், எனக் கருதினேம்.

ஆனால், ஒவ்வொரு மாவட்டக் கழகத்தினரும், இந்தப் பட்டியல் மட்டுமின்றி, வேறோர் பட்டியலும் தந்தனர்! அதுவே, வியப்புக் கடலில் தள்ளிற்று!!



அரக்கோணம் பொதுக்குழுவுக்குப் பின் தி. மு. க. தாங்க நேர்ந்த சங்கடங்களை, உலகு அறியும். தமிழகத்தின் ஆதிக்கச் சின்னமான டால்மியாபுரத்தை மாற்றும் அறப்போரில்ஈடுபடுவதென, திட்டம்தீட்டிக்கொண்டிருந்தநேரத்தில், ஆச்சாரியாரின் புதுக் கல்வித்திட்டமும், நேரு பண்டிதரின் சுடுசொல்வீச்சும் கிடைக்கவே, இந்த மூன்று போராட்டங்களையும் மேற்கொள்ள நேர்ந்தது.

ஒவ்வொன்றும் ஒவ்வொருவகையில்! திருச்சிமாவட்டம், கல்லக்குடி, நோக்கிச் சென்றது. 'சென்னை மாவட்டம்' ஆச்சாரியார் இல்லம் நோக்கிச் சென்றது. இந்த மாவட்டங்களும், ஏனைய மாவட்டங்களும் நேருபண்டிதருக்கு, திராவிடத்தின் உள்ளக் குமுறலை எடுத்துக் காட்டின.

ஒரு நாள்! ஒப்பற்ற வீரநாள்!!—ஆனால், அது தந்து விட்டுப்போன, சேதமும் சோகமும், செப்புந்தரமன்று. அன்று பிடிபட்டு, சிறை சென்றோரும், சிறையைச் சிங்காரக் கோட்டமெனக் கருதி காலத்தைக் கழித்து விட்டுத் திரும்பியோரும், ஏராளம். அந்த நிலைமட்டுமின்றி, அன்றைய அறப்போரின் விளைவால், பழிசுமத்தப்பட்டுகுற்றவாளிக்கூண்டிலே நிற்கிறார்கள், தூத்துக்குடித் தூயவர்கள்! 'கல்லக்குடி' வீரர்கள், ஆண்டு ஒன்றரையை அடக்குமுறையின் பரிசாக ஏற்று, திருச்சி சிறையிலே, நுழைந்து விட்டனர்!! இந்த அளவுக்கு வேதனையும் அடக்குமுறையும் தாங்கிய கழகத்தால், எப்படி, இந்தப் பட்டியலைத் தரமுடிந்தது?—என்ற வியப்பு ஏற்படத்தானே செய்யும்.

பிறகே, விளங்கிற்று—ஆளவந்தார் வழங்கிய இவ்வளவு அடக்குமுறைகளின் விளைவாகவே, இந்தப் பட்டியல் அதிகமாயிற்று, எனும் உண்மை.

ஒவ்வொரு மாவட்டத்தோழரும், தத்தமது மாவட்டத்தில், அறப்போருக்குப் பின் துவக்கப்படிருக்கிற கிளைக் கழகங்களின் பட்டியலை, எடுத்துக் கூறினர். இது, சாதாரணமான பட்டியலா! 'செலவு' கணக்கை எதிர்ப்பார்த்துச்செல்லும் போது; 'வரவு' விபரம் காத்துக் கொண்டிருக்கிறதென்றால், களிப்பு, ஏற்படத்தானே செய்யும்.

*

தி. மு. க. சிற்றூர்க்குள்ளும், சிறு சிறு கிராமங்களுக்குள்ளும், தன்னுடைய கழகக் கொடியைப் பறக்க விட்டிருக்கிறது! — என்று, பொதுக் குழுவில், விபரம் தரப்பட்டது.

அதுமட்டுமா? ரூபாய் 23 ஆயிரம், சதி வழக்குக்காகத் திரட்டித் தந்த விபரமும், கூறப்பட்டது!

அது மட்டுமா? ஆங்காங்கும் எத்தனை பெத்தனை கூட்டங்கள் நடைபெற்றன, எனும் விபரமும் கூறப்பட்டது!

இந்த விபரங்களைத் தரும்போது தோழர்கள் முகத்தில், சுடர்விட்ட ஆனந்தமிருக்கிறதே அதுதான் — கழகத்தின் ஜீவகளை போலும். அநேகமாக, ஒவ்வோர்மாவட்டத்திலிருந்தும் ஏராளமான தோழர்கள், சிறைக்குச் சென்றிருக்கின்றனர். அவ்வளவு துயரத்தையும் தாங்கிக்கொண்டு, வெளியில் வந்ததும், ஒவ்வொருவரின் உள்ளமும் 'பூனை'யாகிவிடவில்லை – புலியாகிவிட்டிருக்கிறது! அதனால்தான், இவ்வளவு பட்டியல் தரமுடிந்திருக்கிறது.

பட்டியல் பெருகப் பெருக, நமது கடமைகள் அதிகமாகின்றன. எங்கோ, ஏதோ ஓரிடத்தில், என்றோ ஓர் நாள்—என்றில்லாமல், எல்லா இடத்திலும் எப்போதும், கழக முழக்கம் நடைபெறுவது அதிகரிக்கிறது என்றால், நாம் செய்த தியாகம் வீண்போகவில்லை என்பது விளங்குகிறது.

அடக்குமுறைக்கு ஆளான இயக்கங்கள், வளர்ந்துள்ளனவேயன்றி வாடியதாகச் சரிதம் கிடையாது!—என்று, அடிக்கடி, நாம் கூறுவதுண்டு. அந்த உண்மையைக் கண்



ணாரக் காண்கிறோம் இன்று. ரூ 23-ஆயிரம்! 'யாரிடமிருந்து? ஏழைகளின் இல்லங்களிலேயிருந்து! யாருக்கு? — ஏழைகளின் கழகத்துக்கு! இந்தத் தொகை, வழக்கம் போல், நாடகமாடிச் சேகரிக்கப்பட்டதல்ல, அணுக்களாகவும்—ரூபாய்களாகவும் — திரட்டப்பட்ட தொகை. வீணர்களின் கெடுமதியால், வீரர்கள் கூண்டுக்குள் வதைகிறார்கள்எனும் கோரத்தைக்கண்ட ஏழையர் உலகம், 'இந்தா! இந்தா!' என்றளித்த அன்புக் காணிக்கை, இது. இந்தக் காணிக்கையோடு இன்னும் 'நிதி' திரட்டித்தர, முடிவு செய்துள்ளது, பொதுக்குழு. இந்த 'நிதி' ஆளவந்தாரின் துப்பாக்கியால் அடிபட்டு மாண்டோர் குடும்பங்களுக்கு— மாண்டோரில் சிலர் ஏதுமறியாத இளைஞர்கள். எனினும், இந்நாட்டுக் குடிமக்கள். அவர்களுக்காகப் பாடுபடும், நாம் அவர்களது குடும்பத்தின் துயரைப்போக்க, இயன்றளவு ஏதாவது செய்ய வேண்டுமென, தோழர்கள் கருதினர்கள். அதே நேரத்தில், அவர்களின் உயிரை இந்த உலகிலிருந்து 'பிடுங்கிக்கொண்ட' ஆட்சியாளருக்கும், பொதுக்குழு அறிவிப்பொன்றைச் செய்திருக்கிறது. "துப்பாக்கிக் குண்டடிபட்டு மாண்டவர்களின் திக்கற்ற குடும்பங்களுக்குச் சென்னை ஆட்சியாளர் உடனடியாக நஷ்ட ஈட்டுத்தொகை கொடுக்க வேண்டும் என்று ஆட்சியாளரை—இப் பொதுக்குழு வற்புறுத்திக் கேட்டுக்கொள்கிறது" எனும், இக்கோரிக்கையை, ஆட்சியாளர் ஏற்றுச்செய்கிறார்களா என்பதையும், நாம் கவனிக்கவேண்டும். ஏனெனில், இப்படிக் கோரிக்கை வந்தால், தான் கவனிக்கப்போவதாக முன்போர் முறை முதலமைச்சர், கூறினராம்!

அந்தக் கூற்றின்படி நடக்கிறாரா, இல்லையா என்பதையும்பார்ப்போம். அன்று குண்டடி பட்டோர், நிரபாதிகள்! எதுவும் அறியாதவர்கள்!!—எனினும் உயிரிழந்திருக்கிறார்கள். நிரபாதிகளைப் பிடித்திழுத்து, வீண் குற்றங்களைச் சுமத்தி, வேதனை விளையாட்டை நடத்துவதையே தமது அரசியல் தந்திரமென ஆச்சாரியார் கருதுகிறார். அதன் காரணமாகவே,

வழக்கும் வம்பும் சிருஷ்டித்து வருகிறார்.

• பொதுக்குழுவைத்திறம்படநடத்திய திருச்சி தீரர்கள், இரண்டுகாட்களுக்கெல்லாம், நம்மை விட்டுப் பிரிக்கப்பட்டு, ஒன்றரை ஆண்டு தண்டனைபெற்று சிறைக்குச் சென்றிருக்கிறார்கள். இவ்வண்ணம் அடக்குமுறை அம்புகளை வீசும் திறமை பெற்ற சர்க்கார், நாட்டின் பிரச்னைகளைக் கவனிக்கிறதா என்றால், அங்கும் அலட்சியத்தையே காண்கிறோம். அதற்குளர், சான்று வடஆற்காட்டிலுள்ள களம்பூர் எனும் சிற்றூரில் நடைபெற்று வரும், உழவர் கிளர்ச்சியாகும். அந்த உழவர் கிளர்ச்சிபற்றி "களம்பூரில் நடக்கும் உழவர் கிளர்ச்சியில் ஈடுபட்டுள்ளோர்மீது வழக்குகள் தொடர்ந்தும், வீடுகளில் புகுந்து பெண்களைத் துன்புறுத்தியும் மற்றும் பலாத்கார செயல்கள் புரிவோர்க்கு ஊக்கம் கொடுத்தும் வரும் ஆட்சியாளரின் அடாத போக்கை இப் பொதுக்குழு வன்மையாகக்கண்டிக்கிறது" என்றும், பொதுக்குழு, தீர்மானம் நிறைவேற்றியுள்ளது. இது போன்ற 'களம்பூர்கள்' இந்தஆட்சியில், ஏராளமாக நடைபெற்றுக் கொண்டிருக்கின்றன. நிலத்தில் உழும் குடியானவன், தன்னுடைய உழைப்பின், பலனை அனுபவிக்க முடியவில்லை—ஊராள்வோரோ'சட்டம்—இதோ! இது தஞ்சைக்குமட்டுமே' என்று தெந்தினை பாடுகின்றனர். இதுபோன்ற பிரச்னைகளிலும் நாம் ஈடுபடவேண்டும், என்பதற்கோர் முன் அறிவிப்பு இது! களம்பூர் கழகப் பிரதிநிதி, தாங்கள் செய்த முயற்சிகளையும், அதனால் தாங்கும்படி நேர்ந்த தழும்புகளையும், எடுத்துச் சொன்னர். அவர் கூறிய 'பட்டியல்' பொதுக்குழு உறுப்பினர்களின் பாராட்டைப் பெற்றது! அத்தகைய ஆக்க வேலைகளிலும் கிராமக் கழகங்கள், பணியாற்றும் காலம் விரைந்துகொண்டிருக்கிறது.



மாளிகைகளிலும், மதோன்மத்தர்களின் உல்லாச விருந்திலும், பல நற் கொள்கைகள் பாசிபடிந்து பலனற்றுப் போய் விடுவதுண்டு. அப்

படிப்பட்டநிலை, ஒருகாலத்தில்நீதிக்கட்சிக்கு இருந்தது. அந்த ஆபத்தினின்றும், அந்தக் கொள்கைகளை மீட்டு, மக்கள் மன்றத்தின் இதயங்கள் தோறும் ஏற்றிவைத்தும் பெருமையைத் திராவிட முன்னேற்றக் கழகம் பெற்றிருக்கிறது. கண்ணீரிலே, பிறந்தோம்! ஒவ்வோர்கிமிடமும், கண்ணீர் சிந்தியபடியே வளர்ந்து கொண்டிருக்கிறோம்! 'நாடே—நமது வீடு' எனும் நற்பண்புகளோடு போரிடும் வீரர்களைப் பெறுவது, கடினம். ஆனால், நமது கழகத்தில், அத்தகைய செயல் வீரர்கள் அதிகமாகிவிட்டார்கள் என்பதைத் திருச்சி பொதுக்குழு காட்டியிருக்கிறது. இல்லையெனில், இவ்வளவு தியாகத் தழும்புகளைத் தாங்கிய பின்னரும், 'பட்டியல்'தருவரா! 'பட்டியல், தருவதே,' பணியெனத் தான் கருதுவரா!! இந்தப்பட்டியல் தந்த மாவட்டக் கழகங்களையும், பொதுக்குழு உறுப்பினர்களையும், தாயகம், பாராட்டும். இந்தப் பட்டியலைக் கூறும்போது, அவர்கள் காட்டிய ஆர்வமும், ஆனந்தமும்தான், நமக்குச் சொத்து.

அந்நியன் — அக்கிரமக்காரன்—ஆகியோரின் பிடியில் அகப்பட்டு அல்லலுறும், தாயகத்தை மீட்கும் தளராத பணியில் ஈடுபட்டிருக்கும் கழக வீரர்களே, நீங்கள் 'வாழி! வாழி!!' என வாழ்த்துகிறோம். விடுதலைப் பயணத்தின், நெருக்கடிக்குப் பின்னும், நீங்கள் காட்டும் ஆர்வத்தைக் காணும்போது, 'கொட்டு முரசே!' என்று ஆனந்தக் கீதம் எழுப்பும் நாள், வெகுதூரத்திலில்லை என்ற அறிகுறி தென்படுகிறது. அந்நாள்வர, ஆர்வத்துடன் பணியாற்றுவோம்! இலட்சக்கணக்கான உறுப்பினர்களைச் சேர்ப்போம்! எங்கும் கிளைக்கழகங்களை உண்டாக்குவோம்! நாடுதோறும்—வீடுதோறும்—நல்லவர் உள்ளம் தோறும், நமது எண்ணங்களைப் பதிப்போம்!

நமதே, நாடு! அடைந்தே தீருவோம்!!

卐

# அந்தப் 'பத்து!'

சென்னை மேல் சபையில் பேசிய நாதமுனி எனும் காங்கிரஸ் உறுப்பினர், வேதனையோடு ஒரு விஷயத்தை வெளியிட்டுள்ளார்.

உறுப்பினரின் வேதனைக்குக்காரணம், நாட்டிலேயிருக்கும் முதியோருக்கெல்லாம் கல்வியில்லாமையைக் குறித்தாகும்.

உண்மை—முதியோருக்கு, அந்த ஒளி கிட்டாத காரணத்தால், அவர்கள் பழைய இருட்டையே 'பரம பதம்' என நம்பி, தாமும் அடைபட்டுக்கிடப்பதோடு தங்களது சந்ததியும் கடைத்தேறுமலிருக்கச்செய்கிறார்கள்.

இந்த நிலையை எடுத்துரைத்த நண்பரை, எவரும் பாராட்டுவர். ஆனால், முதியோர்விஷயம் பற்றிப் பேசிய நண்பர், 'முக்கியமான விஷயம்', ஒன்றையும், தமது பேச்சின் போது குறிப்பிட்டுள்ளார்.

கடந்த இருவாரங்களுக்கு முன்பு, மேல் சபைத் தேர்தல் நடைபெற்றதல்லவா? அதைக் குறித்து கூறும்போது, "ஜோதி—ஜி. டி. நாயுடு போட்டியில், பத்து ஓட்டுகள் செல்லுபடியாகவில்லை! சட்டசபை உறுப்பினர்களுக்கே எப்படி ஓட்டுப் போடுவது என்பது தெரியாத அளவுக்கு முதியோர் கல்வியின் நிலை, இருக்கிறது." என்று குறிப்பிட்டுள்ளார்.

பத்து ஓட்டுகள், செல்லுபடியாகாமற் போனதுக்கு இவ்விதக் காரணம்—கூறுகிறார். இதுவா, காரணம்! அல்ல, அல்ல; நம்முடைய சட்ட சபை உறுப்பினர்களுக்கு, பேசவோ—வாதாடவோ—அல்லது புரிந்து கொள்ளவோ வேண்டுமானால், 'போதிய கல்வி' இல்லையென்று, கூற முடியுமே யொழிய, ஓட்டுப்போடும் விஷயம் 'தெரியாது' என்று கூறமுடியாது.

ஏனெனில், பழக்கப்பட்டவர்கள்—பலர் மூலம் பயிற்சி பெற்றதற்கும், சான்றுகள் உண்டு.

ஆகவே, பத்து ஓட்டுகள் செல்லுபடியாகாமற் போனதற்கு, இவர்களது, 'தெரியாமை'—அல்லகாரணம்!

தெரிந்து—திட்டவட்டத்தோடு செய்யப்பட்ட, சதி, அது.

'சதி', என்றாலே, தனித்தனியாக ஒவ்வொருவரும் செய்யமுடியாது.

ஆகவே, ஒருகுறிப்பிட்ட கட்சியிலிருப்போர், வேண்டுமென்றே செய்த காரியம் இது.

உதிரிகள்! உதிரிக்கட்சிகள்! என்று சில 'அகில உலக' மனிதர்களால் அழைக்கப்படுவோரெல்லாம், இந்தத் தேர்தலில், தமது கடமையைச் செய்திருக்கின்றனர்.

ஆனால், பத்துப்பேர் மட்டும், வேண்டுமென்றே, தமது ஓட்டுக்களைச் செல்லாமலாக்கியிருக்கின்றனர்!

என்ன காரணம்?—தோழியர் ஜோதியின் மீதுள்ள ஆத்திரத்தாலா! அங்ஙனமெனில், ஜி. டி. நாயுடுக்கு அன்றோ, ஓட்டுபோட்டிருப்பர்.

ஜி. டி. நாயுடுவையும்பிடிக்கவில்லை—ஜோதியையும் பிடிக்கவில்லை என்றால் 'கட்சி'யைப்பற்றித்தான்,கருதுவர்.

"காங்கிரஸ் ஆட்சியை முறியடிக்க வேண்டும்—அப்படியானல், ஜி. டி. நாயுடுக்கே, ஓட்டு போட்டிருப்பர்."

எதற்காக, காங்கிரஸை முறியடிப்பது? ஆச்சரியமோ ஆளட்டுமே! —அப்படியானல், நம்முடையஓட்டுகளைச் செல்லாததாக்கிவிடுவோமே.

இந்த எண்ணத்துடனேயே, அந்தப் பத்துப்பேரும் செய்திருக்கிறார்கள்.

எந்தக்கட்சிக்காரர்களாக இருக்கமுடியும், அவர்கள்? நிச்சயமாகக் காங்கிரஸ் கட்சியைச்சேர்ந்தவர்களாக இருக்கமாட்டார்கள்! அவர்களாயிருந்தால், ஓட்டு, ஜோதிக்கு விழும்—இல்லையெனில், நாயுடுக்கு விழும். அவ்வண்ணமே பலர், நாயுடுவுக்கும் போட்டுள்ளனர்.

'உதிரிக்கட்சிகளில்,' இருப்போருக்குத் தமது ஓட்டை, இவ்விதம் வீணுக்கவேண்டுமெனும் விருப்பம், வருவதற்கு வாய்ப்பில்லை—அப்படி வந்தாலும், 'பத்துப்பேர்' கூடி இவ்வண்ணம் செய்வதென்பது, சாத்யமல்ல.

பின் யாராக இருக்கமுடியும்? விஷயம் தெரிந்த கட்சியினர்தான், இந்த விபரீதத்துக்கு, தமது மனதை ஒப்படைத்திருக்க வேண்டும்.

காங்கிரஸ் பாசிசத்தை ஒழித்து சமதர்மச் சோலையாக நாட்டை ஆக்கவேண்டும் என்றநல்லெண்ணம் கொண்டோரெல்லாம், இவ்வண்ணம் மயங்கினல், இந்த நாட்டின் 'தலைவிதியை' யார்தான் எழுதுவது?

அந்தப் 'பத்து'ம், இன்னும் இரண்டொருவரும், நாயுடுவைத் தேர்ந்தெடுத்திருந்தால், நாசகால ஆட்சிக்கு நல்லதோர் படிப்பினை ஏற்பட்டிருக்கும்.

செய்யத் தவறி விட்டார்கள், எம். எல். ஏ-க்கள்! அதுவும் எதிர்க்கட்சி எம். எல்.ஏ-க்கள்!!

## அறிவிப்பு

மதுரையில் 'மனோகரா' புத்தகம் வெளியிட்டவர்கள் மீது நடவடிக்கை எடுக்கப்பட்டிருக்கிறது. மதுரையிலிருந்து மா. சீனிவாசன் என்பவர் வெளியிட்டுள்ள வசன புத்தகம் நூற்றுக்குநூறு தவறுடைய கருத்துக்கள், கொண்டபுத்தகமாகும். படத்தில் உள்ள வசனங்கள் எதுவுமே அதில் ஒழுங்காக இடம் பெறவில்லை. பொதுமக்கள் அதை வாங்கி ஏமாறவேண்டாம் என்பதோடு—இத்தகைய போலி வியாபாரிகள்மீது சட்டப்படி நடவடிக்கைகள் எடுக்கப்பட இருக்கின்றன என்பதையும் அறிவிக்கிறோம்.

நிர்வாகி
'முரசொலி' பதிப்பகம்
ஜக்ரியா காலனி
சென்னை 24.



# மூன்று கோடி மோசடி!

மூன்று கோடி ரூபாய்களை, மோசடியாலும், திருட்டாலும் பறிகொடுத்தவர்களை எண்ணும் பொழுது எவருக்கும் பச்சாதாபம் உண்டாகாமற்போகாது—பறிகொடுத்தவர்கள் யார் என அறிந்து கொள்ளும் அவாவும் எழாமற் போகாது.

தனிப்பட்ட நபர் எவரும் இத்தொகையைப் பறிகொடுக்கவில்லை. இந்தியாவின் தற்காப்பிலாக்காதான் மோசடிக்கும், திருட்டுக்கும் ஆளாகி மூன்று கோடி ரூபாய்களைப் பறிகொடுத்திருக்கிறது.

1951—52-ம் ஆண்டின் தணிக்கை ரிப்போர்ட்டில் இந்த விவரம் வெளியாகியுள்ளது.

தற்காப்பிலாக்காவில், ரொக்கமாக ஏற்பட்ட நஷ்டம் 17 இலட்சம். மோசடியாலும், திருட்டாலும் ஏற்பட்ட நஷ்டம் மூன்று கோடி.

பொது மக்களின் நலனுக்காகப் பாடுபடும் இலாக்காவில், இந்த சிசனிக்கத்தக்க காரியம் நடைபெற்றிருக்கிறது—பொது மக்களின் பணம் அளவுமீறி மோசடி செய்யப்பட்டிருக்கிறது.

இந்தக் காரியம் எப்படி நடைபெற்றது என்பதை தணிக்கை ரிப்போர்ட், "தனிப்பட்ட இராணுவ அதிகாரிகளுக்கு விதிகள், உத்தரவுகள் பற்றியும், கணக்கு வைத்துக் கொள்ளும் முறைகளைப் பற்றியும் விஷயம் தெரியாமையினால் அநேக ஒழுங்கீனங்கள் நேரிட்டிருக்கின்றன" என்று குறிப்பிட்டிருக்கிறது.

விதிகள், உத்தரவுகள், கணக்கு வைத்துக்கொள்ளும் முறை ஆகியவைப்பற்றி, விஷயம் தெரியாதவர்கள் ஏன் அந்தப் பொறுப்புகளில் ஈடுபடுத்தப் படவேண்டும்? இது யாருடைய குற்றம்? அப்படி, விதிகள்,' உத்தரவுகள், கணக்கு வைத்துக் கொள்ளும் முறைகளைத் தெரிந்தவர்கள், இராணுவத்தில் கிடையாதா? இல்லையென்றால், படித்து, பட்டம் பெற்று, வேலையோ வேலை என்று அலைபவர்களுக்கு, அத்தகைய பதவிகளை அளிக்கக் கூடாதா?

படிப்புக்குப் பணம் இல்லை, தொழிற்சாலைகளை நிறுவி, தொழிலாளிகளுக்கு வேலைதர பணம் இல்லை, எனது பல்லவி பாடும் சர்க்கார், ஓர் இலாக்காவில், மூன்று கோடி ரூபாய்களை, மோசடியாலும், திருட்டாலும் இழந்திருக்கிறது.

இந்த வீராதி வீரர்கள்தான், 'எங்களைத் தவிர இந்த நாட்டை வேறு யாரும்ஆளமுடியாது' என்று சங்கநாதம் எழுப்புகிறார்கள்!

"உறவினர்கள் என்றோ, வேண்டியவர்கள் என்றோ, ஜாதிக்காரர்கள் என்றோ, நாங்கள் கவனித்துப் பதவிகளை அளிப்பதில்லை. அனுபவமிக்கவர்களுக்கும் திறமைசாலிகளுக்கும் தான்பதவிகளை அளிக்கிறோம்" என அந்தாதி பாடுபவர்கள், இந்த அக்கிரமம்மிக்க செயல் ஏற்பட்டதன் காரணத்தை விளக்குவார்களா?

வடநாட்டில் வதிபவர்கள், இதற்குப் பதில் கூறவேண்டாம் — கூறவும் மாட்டார்கள்! அவர்கள் எங்கேயோ — நாம் எங்கேயோ! அதுமட்டுமல்ல, வடநாட்டின் பிடியிலிருந்து விடுபடவேண்டும் என்று கூறும் நமக்கு அவர்கள் எப்படிப் பதில் கூறுவர்?

அண்மையில், சென்னை சட்டசபையில், கவர்னர், மந்திரிகள் மானியக் கோரிக்கைமீது நடைபெற்ற விவாதத்தின்போது, மந்திரிகளின்மீது கூறப்பட்ட புகார்களுக்குப்பதிலளித்தாரே, நிதிமந்திரி சுப்பிரமணியம், "சேலத்தில் பப்ளிக் பிராசிக்யூட்டராக நியமிக்கப்பட்டிருப்பவர், கவுண்டர் என்பதற்காகவோ, திருச்சி பப்ளிக் பிராசிக்யூட்டர் அய்யங்கார் என்பதற்காகவோ, நியமிக்கப்படவில்லை; ஜில்லா அதிகாரிகளின் சிபாரிசுகளின்மீதும், யோக்கியதையைக் கவனித்தும்தான் நியமித்திருக்கிறோம்" என்று கூறியிருக்கிறாரே, அவர் இந்த மூன்று கோடி ரூபாய் நஷ்டத்திற்குப் பதிலளிப்பாரா?

அனுபவமிக்கவர்களையும், திறமைசாலிகளையும் அந்தப் பதவிகளுக்கு அமர்த்தியிருந்தால், மோசடியும் திருட்டும் நடைபெற்றிருக்குமா?

வேண்டியவர்களென்றும், உறவினர்களென்றும், ஜாதிக்காரர்களென்றும் பட்சபாதப்பாராமல் திறமைசாலிகளுக்குப்பதவியை அளித்திருந்தால், விஷயம் தெரியாதவர்களும் கணக்கு வைத்துக்கொள்ளும் முறைகளைத் தெரியாதவர்களும் எப்படி அந்த இலாக்காவுக்கு வந்து சேர்ந்தார்கள்?

சொந்தக்காரர்களுக்குச் சலுகை என்பது கிடையாது என்று சிந்து பாடும் நிதி மந்திரியார்—அனுபவத்தையும் யோக்கியதையையும் பரிசீலித்தே பதவியளிப்பதாகச் சாற்றும் மந்திரியார் — மோசடி நடைபெற்றதற்கும், விஷயம் தெரியாதவர்கள் பதவியில் இருக்கிறார்கள் என்று தணிக்கை போர்டார் அளிக்கும் குறிப்புக்கும், தக்க பதில் தருவாரா?

ஜோதி அம்மாளுக்கு மந்திரிப் பதவி கொடுத்ததற்கு விளக்கம் கூற வந்த ஆச்சாரியார், அனுபவமும், திறமையும் யோக்கியமும் உள்ள வர்களுக்கே அதிகாரங்களை அளிப்பதாகக் கூறினரே, அவர் இதற்கு என்னபதில் சொல்லுகிறார்?

மூன்று கோடி ரூபாய்களை, மோசடியாலும், திருட்டாலும் பறிகொடுக்கும் நிர்வாகப் பொறுப்பினை ஏற்றுள்ள டில்லியுடன்தான், தென்னாடு இணைந்திருக்க வேண்டும் என்று வேறு செப்புகிறார்கள்!

காங்கிரஸ் — ஜனநாயகம் என்ற போர்வைக்குள் இருந்துகொண்டு இவர்கள் செய்யும் பித்தலாட்டங்கள், இவர்களையும் மீறி வெளியே வந்தாலும், அவற்றை அறிந்து விழிப்படையும் நிலையைப் பொது மக்களுக்கு உண்டாக்கும் பொறுப்பில் நாம் இருக்கிறோம். இதனை அறியாத அப்பாவிகள் நம்மைத் தவறுகப் புரிந்துகொண்டு, நாம் அவர்களுக்கு ஏதோ விரோதமான காரியங்களைச் செய்வதாகக் கருதிவிடுகிறார்கள். மோசடியும் திருட்டும் எங்கே—யாரால் செய்யப்படுகிறது—எண்ணிப் பாருங்கள். அனுபவமும் திறமையும் யோக்கியமும் ஒருங்கே அமையப் பெற்றதாகச் சொல்லப்படும் 'உத்தமர்கள்' இருக்கிறார்களே, அங்கேதான்—அவர்கள் தான் இந்தக்காரியத்தைச்செய்கிறார்கள்—நாமும் பார்த்துக் கொண்டுதான் இருக்கிறோம்!

# பிராமணியம் அழிகிறது!

—[நக்கீரன்]—

எண்ணிப் பத்தே நாட்கள்தான்! அதற்குள், இந்தப் பெரும் மாறுதல் ஏற்பட்டுவிட்டது! என்ன அப்படிப்பட்ட அதிசயிக்கத்தக்க அவ்வளவு பெரிய மாறுதல் என்றுதான் கேட்கத் தோன்றும் எவருக்கும்!

அண்மையில், எகிப்தில் நடைபெற்ற அரசியல் மாறுதலையே குறிப்பிடுகிறேன் என்று சிலர் அவசரப்பட்டுப் பதில் கூறக்கூடும்.

ஜெனரல் நகீப்பை, நாசர் விரட்டியதும், பின், நாசர் ஓய்வெடுத்துக் கொள்ளும் நிலைமைக்கு ஆளாகி, நகீப்பே மீண்டும் தலைவரானதும் பத்து நாட்களில் நடைபெற்ற சம்பவம்தானே! அதையேதான் நானும் குறிப்பிடுகிறேன் என்று, அவசரம் மட்டுமல்ல, ஆவேசமும் ஆத்திரமும் ஒன்றையொன்று போட்டி போட்டுக்கொள்வதுபோன்ற உற்சாகத்தோடு உடனடியாகப் பதில் கூறிவிடுவர்!

ஆனல், உண்மை இதுவல்ல!

தோழர் வெங்கடாசலம் அவர்களுக்கு, தம்முடைய துணைவி ஜோதி அம்மாள் மந்திரியாக ஆவார் அல்லது ஆக்கப்படுவார் என்ற விவரம், அந்த அம்மையார் மந்திரியாவதற்குப் பத்து நாட்களுக்கு முன்னர் கூடத் தெரியாமல் இருந்திருக்கலாம் என்ற யூகத்தை அடிப்படையாக வைத்து, இவ்விதம் கூறுவதாகவும் சிலர் தவறாகக் கருதக்கூடும். ஜோதி அம்மாள் மந்திரியாகும் விஷயம் கணவர் வெங்கடாசலம் அவர்களுக்கும் தெரிந்த ஒன்றுதான். என்றபோதிலும், எந்தக் காரணத்தைக்கொண்டும், பொதுமக்களுக்கு இதுவரை அறிமுகம் இல்லாத—அறிமுகம் செய்துவைக்கப்படாத ஒருவரை, திடீரென்று, 'இவர்தான் உங்களுடைய தலைவர்' என்று கூறிக் கொண்டுவந்து நிறுத்தப்பட்டால், அதனை, எண்ணிப் பத்து நாட்களுக்குள் ஏற்பட்ட ஒரு மாறுதல் என்றுதானே எவரும் கருதுவர்!

ஆனல், உண்மை இதுவும் அல்ல!

அப்படியானல், ஜி. துரைசாமி அவர்களை ஜி. வெங்கடாசலத்தம்மையார் எண்ணிப் பத்து, ஓட்டுகளில் தோற்கடித்தாரே, அந்தப் பத்து ஓட்டுக்களை மனதில் வைத்துக்கொண்டு, பத்து நாட்களில் ஏற்பட்ட மாறுதல் என்று நான் கூறிப்பிடுவதாகவும் சிலர் தப்புக்கணக்குப் போடக்கூடும். ஆனல் இந்தப் பத்து ஓட் விஷயம் இருக்கிறதே, இது, "உள்ளிருந்தே கொல்லும் வியாதி" என்ற பழமொழியைப் பின்பற்ற யாரும் முன்வாராததால், அந்த அரிய சேவையை "நாமாவது செய்வோம்" என்ற 'தியாக' உணர்ச்சியின் அடிப்படையில் செய்யப்பட்ட காரியமாகும்.

எனவே, அந்த மாறுதலுக்கு இதனையும் காரணமாகக் கூற முடியாது.

தேர்தலில் தோற்றுரே தோழர் பக்தவச்சலம் அவர்கள்! அவருடைய பத்து நாள் முயற்சி அவரை மந்திரியாக்கிற்று! எனவே, அந்த மாறுதலைத்தான் நான் குறிப்பிடுகிறேன் என்று ஏமாந்த நிலையில் சிலர் எண்ணக்கூடும்! அது மிக மிகத் தவறு!

அன்பர் பக்தவச்சலம் அவர்கள் தம்முடைய தோல்வியை மாலையாகச் சூட்டிக்கொண்ட அந்த நாளிலிருந்து, அவர் மந்திரியான காலம் வரையில், அல்லும் பகலும் அதே வேலையாக இருந்து ஆச்சாரியாரை அணைத்தணைத்து, அதாவது ஆச்சாரியார் எந்தக் காரியத்தைச் செய்தாலும், அது நாட்டுக்கு நல்லதோ, கெட்டதோ, அதனை ஆதரித்துத் தீருவது என்ற தவிர்க்கமுடியாத நிர்ப்பந்தத்துக்குத் தள்ளப்பட்டுப் பெற்ற பெரும் பேறும், இந்த மந்திரிப் பதவியை 'வெறும்' பத்து நாள் முயற்சியால் பெறப்பட்ட ஒன்று என்று சிறிதளவு அரசியலறிவு படைத்தவனும் சொல்ல மாட்டானே!

எனவே, இந்தச் சம்பவமும் அந்தச் சொல்லப்படும் மாறுதலுக்கு எடுத்துக் காட்டாகக் கூறமுடியாது.

தங்களுக்குக் கவர்னர் பதவி கிடைக்கும் என்று தேர்தலில் தோற்ற தோழர்கள் சந்தானம் அய்யங்காரும், குமாரசாமி ராஜாவும் பத்து நாட்களுக்கு முன்னர் கூட எண்ணியிருக்க மாட்டார்கள்—திடீரென்று எதிர்பாராதவிதமாக அவர்களுக்கு அந்தப் பதவி கிடைத்துவிட்டது! எனவே, இதனைத்தான் நான் குறிப்பிடுவதாகச் சில அரசியல் ஆருடக்காரர்கள், இன்று, பத்திரிகை விலையாவதற்கு 'இதுவும் ஒரு வழி' என்று கண்டுபிடிக்கப்பட்ட இராசிபலன் கணிக்கப்படுவதுபோல், குறுக்கு வழியில் இறங்கித், தாங்கள் கூறும் காரணம் தான் உண்மையென்று உளறிக் கொட்டுவார்கள். ஆனல், இன்றைய ஆட்சியில்—காங்கிரஸ் ஆட்சியில்—விழுந்தவர்களைத் தூக்கிவிடுவது என்ற 'சிறந்த' கொள்கை, அதாவது காங்கிரஸ் அரசியல் அகராதிப்படி, ஜனநாயகம் பின்பற்றப்படுகிறது. தேர்தலில் தோற்றவர்களைத் துவளவிடாமல் தூக்கிவிடுவதுதான் இன்றைய ஆட்சியின் ஜனநாயகமாகக் கொள்ளப்பட்டிருக்கிறது. கீழே விழுந்தவர்களைத் தூக்கிவிடுவது என்னவோ, நம்முடைய பண்பின்படி ஒரு நல்ல செயலாகும் என்பதனை நாமும் மறுக்கவில்லை—மறுக்கக்கூடாது. ஆனல், இங்கு குறிப்பிடப்படும் விழுந்தவர்கள் தாங்களாக விழவுமில்லை — தவறி விழவுமில்லை — வீழ்த்தப்பட்டவர்கள் — தகாதவர்கள் என்று கருதிய பொதுமக்களால் வீழ்த்தப்பட்டவர்கள்—முறியடிக்கப்பட்டவர்கள் — தேர்தலில் தோற்கடிக்கப்பட்டவர்கள்.



இப்படிப்பட்ட இவர்களைத் தூக்கிவிடுவதுதான் இன்றைய துரைத்தனத்தாரின் ஜனநாயகமாம்! இப்படிப்பட்ட நாட்டைக் கெடுக்கும் நயவஞ்சக ஜனநாயகத்தின் அடிப்படையில் செய்யப்படும் சம்பவங்களை நான் குறிப்பிடவில்லை.

எனவே, இதுவும் அதற்குச் சான்றாகவராது.

எனவே, இவற்றிற்கெல்லாம் மேலாக ஒரு மாறுதல் அண்மையில் நடைபெற்றிருக்கிறது. முன் கூறியபடி, எண்ணிப் பத்து நாட்களில் அந்த மாறுதல் ஏற்பட்டிருக்கிறது.

அதாவது, ஒரு பிராமணன் கிழவனாக மாறியிருக்கிறன். எண்ணிப் பத்தே நாட்களில் இந்த மாறுதல் உண்டாகியிருக்கிறது.

*

பிராமணன் கிழவனாக மாறுவது ஒரு அதிசயிக்கத்தக்க அற்புதமான மாறுதலா என்று எவரும்தான் கேட்பர். பிராமணன் மட்டுமென்ன, மண்ணில் பிறந்த அனைவரும்—அனைத்துமே கிழமாகமாறித்தானே மடிய நேரிடுகிறது. இந்த உபகண்டத்தைப் பொறுத்தவரையில் பிஞ்சிலே பழுப்பவர்கள்தான் அதிகம் என்றபோதிலும், கிழமாகும் இயல்பு எல்லாருக்கும்—எல்லாவற்றிற்கும் இயற்கையாக அமைந்த ஒன்றுகும் என்பதனை எவரும் வற்புறுத்தியே தீருவர். எவர் எப்படிப்பட்ட வாதம்புரிந்து நான்கூறுவதில் பொருளும் பொருத்தமும் இல்லையென்று நிரூபித்துக் காட்ட முன்வந்தபோதிலும், அந்த மாறுதலில் என்னவோ அதிசயமும், அர்த்தபுஷ்டியும் அடங்கித்தான் இருக்கிறதென்பதை நீங்களும் ஒப்புக்கொள்ளத்தான் போகிறீர்கள்.

*

1–3–54–ல், கொரியா சென்றிருந்த சமாதானப் படையின் ஒரு பகுதி சென்னை துறைமுகத்தில் வந்திறங்கிய போது அவர்களை வரவேற்ற ஆச்சாரியார், "நான் ஒரு பிராமணன் என்ற முறையில் க்ஷத்ரியர்களாகிய உங்களை ஆசீர்வதித்து வரவேற்கிறேன்" என்று கூறியது வாசகர்களுக்கு நினைவிருக்கலாம். அதைக்குறித்து, 'அந்தமரம் வளரும் விதம்' என்ற தலைப்போடு ஒரு கட்டுரையும் எழுதியிருந்தோம்.

13–1–54–ல் கொரியா சென்றிருந்த சமாதானப் படையின் இன்னொரு பகுதி சென்னையில் வந்திறங்கிய போதும் ஆச்சாரியார், அவர்களை வரவேற்று ஆசீர்வதித்திருக்கிறுர்.

பத்து நாட்களுக்குமுன் "பார்ப்பனன் என்ற முறையில் ஆசீர்வதித்த ஆச்சாரியார் இப்போது "வயது முதிர்ந்தவன்" என்ற முறையில் ஆசீர்வதித்திருக்கிறுர்.

> வயது முதிர்ந்த நான் உங்களுக்கு ஆசிகூறி வரவேற்கிறேன். என்னுடைய வயதுக்கு நீங்களும் வாழ்ந்திருங்கள்.

என்று கூறி வாழ்த்தி வரவேற்றிருக்கிறுர்.

ஒரு பிராமணன், மற்ற மூன்று வகுப்பினரையும் ஆசிர்வதிக்க வேண்டுமென்ற சம்பிரதாயத்தின் அடிப்படையில் பத்து நாட்களுக்கு முன் ஆசீர்வாத அருட்கடாட்சம் வழங்கிய ஆச்சாரியார், இன்று, அதாவது எண்ணிப் பத்து நாட்களில், தம்மை ஒருபிராமணன் என்று சொல்லிக் கொள்ளாமல், 'கிழவன்' என்று கூறி ஆசீர்வதித்திருக்கிறுர்.

1–3–54ல் பிராமண ஆச்சாரியாராக இருந்தவர் 13–3–54–ல் கிழ ஆச்சாரியாராக மாறியிருக்கிறுர் என்று கூறுவதில் ஆச்சரியமும் அதிசயமுமான மாறுதல் இல்லையென்று யார்தான் கூறமுடியும்?

தன்னை ஒரு பிராமணன் என்று கூறிக் கொள்வதில் பெருமிதம் கொண்டுள்ள ஆச்சாரியார் ஏன் தம்மை ஒருகிழவனுக்கிக் கொண்டார்? அதுவும் எண்ணிப் பத்தே நாட்களில் பிராமண ஆசீர்வாதம் கிழ ஆசீர்வாதமாக ஏன் மாறிற்று? அதிலும், கொரியா சென்று திரும்பிய படையின் ஒரு பகுதிக்குப் பிராமண ஆசீர்வாதமும், இன்னொரு பகுதிக்குக் கிழ ஆசீர்வாதமும் கிடைத்ததென்றால், இதைவிட அற்புதமான— அதிசயிக்கத்தக்க மாறுதல் வேறேதேனும் இருக்க முடியுமா?

பெரியவர்கள் மற்றவர்களை ஆசீர்வதிப்பது இந்நாட்டுப் பண்பாடுகளில் ஒன்று. வயதானவர்கள் வயதாக வேண்டியவர்களை வாழ்த்துவதில் தவறென்றுமில்லை. அவர்களும் இவர்களைப்போல் நெடுநாட்கள் வாழவேண்டுமென்ற நல்லெண்ணத்தின் அடிப்படையில் கையாளப்படும் ஒரு முறையாகும். நாட்டில் பெரியவர்கள் அறிவில் பெரியவர்களாகவும் இருந்து வாழ்ந்து வருதை ஒரு பெரும் பேருக நாம் (இந்நாட்டு மக்கள்) கருதுவதுண்டு. ஆண்டிலும் அறிவிலும் ஒருமித்த முதிர்ச்சி அடைந்தவர்களின் அனுபவம், ஆசீர்வாதம் பெறுபவர்களுக்குக் கிடைப்பதால், அவர்களும்

# பிராமணியம் அழிகிறது!

—[நக்கீரன்]—

எண்ணிப் பத்தே நாட்கள்தான்! அதற்குள், இந்தப் பெரும் மாறுதல் ஏற்பட்டுவிட்டது! என்ன அப்படிப்பட்ட அதிசயிக்கத்தக்க அவ்வளவு பெரிய மாறுதல் என்றுதான் கேட்கத் தோன்றும் எவருக்கும்!

அண்மையில், எகிப்தில் நடைபெற்ற அரசியல் மாறுதலையே குறிப்பிடுகிறேன் என்று சிலர் அவசரப்பட்டுப் பதில் கூறக்கூடும்.

ஜெனரல் நகீப்பை, நாசர் விரட்டியதும், பின், நாசர் ஓய்வெடுத்துக் கொள்ளும் நிலைமைக்கு ஆளாகி, நகீப்பே மீண்டும் தலைவரானதும் பத்து நாட்களில் நடைபெற்ற சம்பவம்தானே! அதையேதான் நானும் குறிப்பிடுகிறேன் என்று, அவசரம் மட்டுமல்ல, ஆவேசமும் ஆத்திரமும் ஒன்றையொன்று போட்டி போட்டுக்கொள்வதுபோன்ற உற்சாகத்தோடு உடனடியாகப் பதில் கூறிவிடுவர்!

ஆனால், உண்மை இதுவல்ல!

தோழர் வெங்கடாசலம் அவர்களுக்கு, தம்முடைய துணைவி ஜோதி அம்மாள் மந்திரியாக ஆவார் அல்லது ஆக்கப்படுவார் என்ற விவரம், அந்த அம்மையார் மந்திரியாவதற்குப் பத்து நாட்களுக்கு முன்னர் கூடத் தெரியாமல் இருந்திருக்கலாம் என்ற யூகத்தை அடிப்படையாக வைத்து, இவ்விதம் கூறுவதாகவும் சிலர் தவறாகக் கருதக்கூடும். ஜோதி அம்மாள் மந்திரியாகும் விஷயம் கணவர் வெங்கடாசலம் அவர்களுக்கும் தெரிந்த ஒன்றுதான். என்றபோதிலும், எந்தக் காரணத்தைக்கொண்டும், பொதுமக்களுக்கு இதுவரை அறிமுகம் இல்லாத—அறிமுகம் செய்துவைக்கப்படாத ஒருவரை, திடீரென்று, 'இவர்தான் உங்களுடைய தலைவர்' என்று கூறிக் கொண்டுவந்து நிறுத்தப்பட்டால், அதனை, எண்ணிப் பத்து நாட்களுக்குள் ஏற்பட்ட ஒரு மாறுதல் என்றுதானே எவரும் கருதுவர்!

ஆனால், உண்மை இதுவும் அல்ல!

அப்படியானால், ஜி. துரைசாமி அவர்களை ஜி. வெங்கடாசலத்தம்மையார் எண்ணிப் பத்து, ஓட்டுகளில் தோற்கடித்தாரே, அந்தப் பத்து ஓட்டுக்களை மனதில் வைத்துக்கொண்டு, பத்து நாட்களில் ஏற்பட்ட மாறுதல் என்று நான் கூறிப்பிடுவதாகவும் சிலர் தப்புக்கணக்குப் போடக்கூடும். ஆனால் இந்தப் பத்து ஓட் விஷயம் இருக்கிறதே, இது, "உள்ளிருந்தே கொல்லும் வியாதி" என்ற பழமொழியைப் பின்பற்ற யாரும் முன்வாராததால், அந்த அரிய சேவையை "நாமாவது செய்வோம்" என்ற 'தியாக' உணர்ச்சியின் அடிப்படையில் செய்யப்பட்ட காரியமாகும்.

எனவே, அந்த மாறுதலுக்கு இதனையும் காரணமாகக் கூற முடியாது.

தேர்தலில் தோற்றுரே தோழர் பக்தவச்சலம் அவர்கள்! அவருடைய பத்து நாள் முயற்சி அவரை மந்திரியாக்கிற்று! எனவே, அந்த மாறுதலைத்தான் நான் குறிப்பிடுகிறேன் என்று ஏமாந்த நிலையில் சிலர் எண்ணக்கூடும்! அது மிக மிகத் தவறு!

அன்பர் பக்தவச்சலம் அவர்கள் தம்முடைய தோல்வியை மாலையாகச் சூட்டிக்கொண்ட அந்த நாளிலிருந்து, அவர் மந்திரியான காலம் வரையில், அல்லும் பகலும் அதே வேலையாக இருந்து ஆச்சாரியாரை அணைத்தணைத்து, அதாவது ஆச்சாரியார் எந்தக் காரியத்தைச் செய்தாலும், அது நாட்டுக்கு நல்லதோ, கெட்டதோ, அதனை ஆதரித்துத் தீருவது என்ற தவிர்க்கமுடியாத நிர்ப்பந்தத்துக்குத் தள்ளப்பட்டுப் பெற்ற பெரும் பேறும், இந்த மந்திரிப் பதவியை 'வெறும்' பத்து நாள் முயற்சியால் பெறப்பட்ட ஒன்று என்று சிறிதளவு அரசியலறிவு படைத்தவனும் சொல்ல மாட்டானே!

எனவே, இந்தச் சம்பவமும் அந்தச் சொல்லப்படும் மாறுதலுக்கு எடுத்துக் காட்டாகக் கூறமுடியாது.

தங்களுக்குக் கவர்னர் பதவி கிடைக்கும் என்று தேர்தலில் தோற்ற தோழர்கள் சந்தானம் அய்யங்காரும், குமாரசாமி ராஜாவும் பத்து நாட்களுக்கு முன்னர் கூட எண்ணியிருக்க மாட்டார்கள்—திடீரென்று எதிர்ப்பாராதவிதமாக அவர்களுக்கு அந்தப் பதவி கிடைத்துவிட்டது! எனவே, இதனைத்தான் நான் குறிப்பிடுவதாகச் சில அரசியல் ஆருடக்காரர்கள், இன்று, பத்திரிகை விலையாவதற்கு 'இதுவும் ஒரு வழி' என்று கண்டுபிடிக்கப்பட்ட இராசிபலன் கணிக்கப்படுவதுபோல், குறுக்கு வழியில் இறங்கித், தாங்கள் கூறும் காரணம் தான் உண்மையென்று உளறிக் கொட்டுவார்கள். ஆனால், இன்றைய ஆட்சியில்—காங்கிரஸ் ஆட்சியில்—விழுந்தவர்களைத் தூக்கிவிடுவது என்ற 'சிறந்த' கொள்கை, அதாவது காங்கிரஸ் அரசியல் அகராதிப்படி, ஜனநாயகம் பின்பற்றப் படுகிறது. தேர்தலில் தோற்றவர்களைத் துவளவிடாமல் தூக்கிவிடுவதுதான் இன்றைய ஆட்சியின் ஜனநாயகமாகக் கொள்ளப்பட்டிருக்கிறது. கீழே விழுந்தவர்களைத் தூக்கிவிடுவது என்னவோ, நம்முடைய பண்பின்படி ஒரு நல்ல செயலாகும் என்பதனை நாமும் மறுக்கவில்லை—மறுக்கக்கூடாது. ஆனால், இங்கு குறிப்பிடப்படும் விழுந்தவர்கள் இருக்கிறார்களே, இவர்கள் தாங்களாக விழவுமில்லை — தவறி விழவுமில்லை — வீழ்த்தப்பட்டவர்கள் — தகாதவர்கள் என்று கருதிய பொதுமக்களால் வீழ்த்தப்பட்டவர்கள்—முறியடிக்கப்பட்டவர்கள் — தேர்தலில் தோற்கடிக்கப்பட்டவர்கள்.



இப்படிப்பட்ட இவர்களைத் தூக்கிவிடுவதுதான் இன்றைய துரைத்தனத்தாரின் ஜனநாயகமாம்! இப்படிப்பட்ட நாட்டைக் கெடுக்கும் நயவஞ்சக ஜனநாயகத்தின் அடிப்படையில் செய்யப்படும் சம்பவங்களை நான் குறிப்பிடவில்லை.

எனவே, இதுவும் அதற்குச் சான்றாக வராது.

எனவே, இவற்றிற்கெல்லாம் மேலாக ஒரு மாறுதல் அண்மையில் நடைபெற்றிருக்கிறது. முன் கூறியபடி, எண்ணிப் பத்துநாட்களில் அந்த மாறுதல் ஏற்பட்டிருக்கிறது.

அதாவது, ஒரு பிராமணன் கிழவனாக மாறியிருக்கிறார். எண்ணிப் பத்தே நாட்களில் இந்த மாறுதல் உண்டாகியிருக்கிறது.

*

பிராமணன் கிழவனாக மாறுவது ஒரு அதிசயிக்கத்தக்க அற்புதமான மாறுதலா என்று எவரும்தான் கேட்பர். பிராமணன் மட்டுமென்ன, மண்ணில் பிறந்த அனைவரும்—அனைத்துமே கிழமாகமாறித்தானே மடிய நேரிடுகிறது. இந்த உபகண்டத்தைப் பொறுத்தவரையில் பிஞ்சிலே பழுப்பவர்கள்தான் அதிகம் என்றபோதிலும், கிழமாகும் இயல்பு எல்லாருக்கும்—எல்லாவற்றிற்கும் இயற்கையாக அமைந்த ஒன்றாகும் என்பதனை எவரும் வற்புறுத்தியே தீருவர். எவர் எப்படிப்பட்ட வாதம்புரிந்து நான்கூறுவதில் பொருளும் பொருத்தமும் இல்லையென்று நிரூபித்துக் காட்ட முன்வந்தபோதிலும், அந்த மாறுதலில் என்னவோ அதிசயமும், அர்த்தபுஷ்டியும் அடங்கித்தான் இருக்கிறதென்பதை நீங்களும் ஒப்புக்கொள்ளத்தான் போகிறீர்கள்.

*

1–3–54–ல், கொரியா சென்றிருந்த சமாதானப் படையின் ஒரு பகுதி சென்னை துறைமுகத்தில் வந்திறங்கிய போது அவர்களை வரவேற்ற ஆச்சாரியார், "நான் ஒரு பிராமணன் என்ற முறையில் க்ஷத்ரியர்களாகிய உங்களை ஆசீர்வதித்து வரவேற்கிறேன்" என்று கூறியது வாசகர்களுக்கு நினைவிருக்கலாம். அதுகுறித்து, 'அந்த மரம் வளரும் விதம்' என்ற தலைப்போடு ஒரு கட்டுரையும் எழுதியிருந்தோம்.

13–1–54–ல் கொரியா சென்றிருந்த சமாதானப் படையின் இன்னொரு பகுதி சென்னையில் வந்திறங்கிய போதும் ஆச்சாரியார், அவர்களை வரவேற்று ஆசீர்வதித்திருக்கிறார்.

பத்து நாட்களுக்குமுன் "பார்ப்பனன் என்ற முறையில் ஆசீர்வதித்த ஆச்சாரியார் இப்போது "வயது முதிர்ந்தவன்" என்ற முறையில் ஆசீர்வதித்திருக்கிறார்.

> வயது முதிர்ந்த நான் உங்களுக்கு ஆசிகூறி வரவேற்கிறேன். என்னுடைய வயதுக்கு நீங்களும் வாழ்ந்திருங்கள்.

என்று கூறி வாழ்த்தி வரவேற்றிருக்கிறார்.

ஒரு பிராமணன், மற்ற மூன்று வகுப்பினரையும் ஆசீர்வதிக்க வேண்டுமென்ற சம்பிரதாயத்தின் அடிப்படையில் பத்து நாட்களுக்கு முன் ஆசீர்வாத அருட்கடாட்சம் வழங்கிய ஆச்சாரியார், இன்று, அதாவது எண்ணிப் பத்து நாட்களில், தம்மை ஒருபிராமணன் என்று சொல்லிக் கொள்ளாமல், "கிழவன்" என்று கூறி ஆசீர்வதித்திருக்கிறார்.

1–3–54ல் பிராமண ஆச்சாரியாராக இருந்தவர் 13–3–54–ல் கிழ ஆச்சாரியாராக மாறியிருக்கிறார் என்று கூறுவதில் ஆச்சரியமும் அதிசயமுமான மாறுதல் இல்லையென்று யார்தான் கூறமுடியும்?

தன்னை ஒரு பிராமணன் என்று கூறிக் கொள்வதில் பெருமிதம் கொண்டுள்ள ஆச்சாரியார் ஏன் தம்மை ஒருகிழவனாக்கிக் கொண்டார்? அதுவும் எண்ணிப் பத்தே நாட்களில் பிராமண ஆசீர்வாதம் கிழ ஆசீர்வாதமாக ஏன் மாறிற்று? அதிலும், கொரியா சென்று திரும்பிய படையின் ஒரு பகுதிக்குப் பிராமண ஆசீர்வாதமும், இன்னொரு பகுதிக்குக் கிழ ஆசீர்வாதமும் கிடைத்ததென்றால், இதைவிட அற்புதமான— அதிசயிக்கத் தக்க மாறுதல் வேறேதேனும் இருக்க முடியுமா?

பெரியவர்கள் மற்றவர்களை ஆசீர்வதிப்பது இந்நாட்டுப் பண்பாடுகளில் ஒன்று. வயதானவர்கள் வயதாக வேண்டியவர்களை வாழ்த்துவதில் தவறொன்றுமில்லை. அவர்களும் இவர்களைப்போல் நெடுநாட்கள் வாழவேண்டுமென்ற நல்லெண்ணத்தின் அடிப்படையில் கையாளப்படும் ஒரு முறையாகும். ஆண்டில் பெரியவர்கள் அறிவில் பெரியவர்களாகவும் இருந்து வாழ்த்துவதை ஒரு பெரும் பேறாக நாம் (இந்நாட்டு மக்கள்) கருதுவதுண்டு. ஆண்டிலும் அறிவிலும் ஒருமித்த முதிர்ச்சி அடைந்தவர்களின் அனுபவம், ஆசீர்வாதம் பெறுபவர்களுக்குக் கிடைப்பதால், அவர்களும்

இவர்களைப்போல அறிவியல்வாதிகளாய் விளங்கவேண்டுமென்ற விருப்பத்தைப் பெற்று, அதற்கேற்ப தங்களின் பழக்க வழக்கங்களை மாற்றிக்கொள்வார்கள் அல்லது சீர்ப்படுத்திக்கொள்வார்கள் என்ற அடிப்படையோடு செய்யப்படும் ஒரு வழக்கமாகும்.

இதில் எந்த ஜாதி பிளவும் வந்து தலையிட்டுச் சதி செய்யக்கூடாது.

உயர்ந்த ஜாதிக்காரன் என்று சொல்லப்படுவன் தாழ்ந்த ஜாதிக்காரன் என்ற நிலைக்குத் தள்ளப்பட்டவனை ஆசீர்வதிப்பது என்ற சம்பிரதாயம் திராவிடப் பண்பாட்டுக்கே முற்றிலும் மாறுபட்டதாகும். "நான் பிராமணன் எனவே உன்னை ஆசீர்வதிக்கிறேன். உன்னை ஆசீர்வதிக்கும் உரிமை (சாஸ்திரப்படி) எனக்கு உண்டு. என்னுடைய ஆசீர்வாதத்தைப் பெற மறுத்தால் நீ மீளா நரகில் வீழ்வாய்" (இதுவும் சாஸ்திரப்படி) என்று கூறப்படும் பித்தலாட்டத்தை ஒப்புக்கொள்ளும் வரையில், உயர்ந்த ஜாதிக்காரன் தாழ்ந்த ஜாதிக்காரன்மீது சவாரி செய்துகொண்டுதான் இருப்பான்.

காலமும் கருத்தும் மாறிக்கொண்டு வரும் இக்காலத்தில், உயர்ந்த ஜாதிக்காரர்கள் என்று தங்களை எண்ணிக்கொண்டிருப்பவர்கள் கூடத் தங்களின் உயர்வைத் தாங்களே நினைத்து வெட்கப்படவேண்டிய அளவுக்கு நிலைமை மாறி வருகிறதென்பதை அவர்களே உணர்கிறார்கள். ஆனால் சில சமயங்களில் மறந்துவிடுகிறார்கள். அந்தச் சமயத்தில், "நான் யார் தெரியுமா? நான் ஒரு பிராமணனாக்கும்!" என்ற பித்தம் தலைக்கேறிவிடுகிறது பிறகு "பிறப்பொக்கும் எல்லா உயிரும்" என்ற சவுக்கடி விழும்போது, 'நானும் உங்களில் ஒருவன்தான். உங்களைவிட நான் எந்த வகையிலும் உயர்ந்தவனல்ல" என்று கூறித் தன்னுடைய பித்தத்தை—ஜாதித்திமிரைத் தெளியவைத்துக் கொள்கிறார்கள்.

இதே நிலைதான் இப்போது ஆச்சாரியாருக்கும் ஏற்பட்டிருக்கிறது.

தன்னை ஒரு பிராமணன் என்று சொல்லிக்கொள்வதில் ஆச்சாரியாருக்கு ஒரு தனிப்பட்ட ஆசை இருக்கிறதென்பதும், சில சமயங்களில் அந்த ஆசையை அடக்க வேண்டுமென்ற நிர்ப்பந்தம் உண்டாகிறதென்பதும் நன்றாகத் தெரிகிறது.

பத்து நாட்களுக்குமுன் தன்னை ஒரு பிராமணன் என்று அறிமுகப்படுத்திக்கொள்ளும் ஆசைக்கு ஆளான ஆச்சாரியார், இன்று அந்த ஆசையை அடக்கிக்கொள்ளும் நிர்ப்பந்தத்துக்கு ஆளாகிறார். காரணம் என்ன? காலம் மாறிவருகிறதென்ற உண்மை அவர் கருத்துக்குப் புலப்படுகிறது. ஒவ்வோர் சமயம் அவருடைய கருத்து ஜாதிஎன்னும் காரிருளால் மூடப்பட்டு விடுகிறது. அப்போது அவர், தம்முடைய சுயவடிவத்தைக் காட்டுகிறார். "இதோபார் நான் ஒரு பிராமணன்-நீ க்ஷத்ரியன்-இவன் வைசியன்—அவன் சூத்திரன் என்று கூறிப் புளகாங்கிதம் அடைகிறார். பிறகு, காரிருள் நீங்கியதும் அதாவது, ஜாதித் திமிர் சிறிது குறைந்ததும் "ஜாதி என்னும் சனியன் தொலையும்வரை நம் நாட்டுக்கு விமோசனமே கிடையாது" என்ற வேதாந்தத்தை உபதேசிக்க முன் வந்துவிடுகிறார்.

இந்த உண்மையைத்தான்அந்தப் பத்துநாளில் ஏற்பட்ட மாறுதல் தெளிவாக்கியிருக்கிறது.

பத்து நாட்களுக்குமுன் தன்னை ஒரு பிராமணன் என்று கூறிய ஆச்சாரியார் பிறகு தன்னை ஒரு கிழவன் என்று அறிமுகப்படுத்துகிறார்.

1—3—54-ல் வந்திறங்கிய படைவீரர்கள் முன் பிராமணனாகக் காட்சியளித்த ஆச்சாரியார், 13—3—54ல் வந்திறங்கிய படைவீரர்கள் முன் பழுத்த கிழவராகக் காட்சியளித்ததன் அந்தரங்கம் என்ன? இனி அந்தப் "பப்பு" வேகாதென்பதா? அல்லது சமயம் போல் வேஷம்போடும் சாமர்த்தியம் என்பதா? ஆச்சாரியாரின் அந்தரங்கம் எதுவாக இருந்தபோதிலும், நாம், இதனைப் பிராமணியம் அழிகிறது— அதாவது ஜாதித்திமிர் தகர்கிறதென்றே கருதுகிறோம்.

ஆச்சாரியாரின் பத்து நாள் அனுபவம் அவரைப் பிராமணனிலிருந்து கிழவனுக்கு இறங்கும்படி செய்துவிட்டதென்றால், அதனைப் பிராமணியம் அழிகிறதென்பதற்கு அறிகுறியாக்காமல் வேறென்னவென்று கூற முடியும்?

ஆச்சாரியார் இன்று ஆட்சிப் பொறுப்பில் இருப்பதால், அவருடைய நடவடிக்கைகள் எல்லாம் நாட்டவர் கருத்தைத் தொடுபவையாக இருக்கின்றன. இதனை ஆச்சாரியார் ஒவ்வோர் சமயங்களில் உணர்கிறார்.

"ஒரு நாட்டை ஆளும் அமைச்சன் தன்னை ஒரு அமைச்சன்என்று சொல்லிக்கொள்ளாமல், அரசியல் விவகாரங்களில்கூடத் தன் ஜாதியை முன்வைத்துப் பேசுகிறானே! ஏன்? கொரியாவிலிருந்து திரும்பிய போர் வீரர்களை வரவேற்ற மந்திரி, நான் இம்மாகாணத்து முதலமைச்சன் என்ற முறையில் அரசியல் சம்பிரதாயப்படி போர்வீரர்களாகிய உங்களை வரவேற்கிறேன் என்று கூறாமல், நான் ஒரு பிராமணன் என்ற முறையில் உங்களை வரவேற்கிறேன் என்று ஏன் — எதற்காகக் கூறினார்" என்ற நாட்டு மக்களின் கருத்து, ஆச்சாரியாரின் கருத்தைக் தொட்டிருக்கிறது. எனவே தான் பத்துநாட்கள் கழித்து வந்திறங்கிய போர்வீரர்களை இந்நாட்டு முறைப்படி வரவேற்றுவாழ்த்தியிருக்கிறார். ஆச்சாரியாருக்கு இப்போது ஏற்பட்டிருக்கும் இந்தத் தெளிவு, "தொட்டால் சுருங்கும் செடி" போல் இல்லாமல் நீடிக்க வேண்டுமென்று விரும்புகிறோம். அப்படி நீடிப்பது அவருக்கும் நல்லது— நாட்டுக்கும் நல்லது — எதற்குமே நல்லது. ❀

## ஆங்கில வார இதழ்

எழும்பூர் பிரதம மாகாணமாஜிஸ்டிரேட் அவர்கள் முன்னிலையில் (Home-Land) ஹோம் லேண்ட் என்ற ஆங்கில வாரப் பத்திரிக்கை, அண்ணாதுரை ஆசிரியராகவும், இரா நெடுஞ்செழியன் அச்சிடுபவராகவும் எஸ். எஸ். பி லிங்கம் பிரசுரகர்த்தராகவும் 12-3-54ல் பதிவு செய்யப்பட்டது.



# அறுபத்துமூவர் தலையீடு!

'மதச் சார்பற்ற சர்க்கார் நாங்கள், என, மாநிலம் முழுதும் பறைசாற்றும் காங்கிரஸ் சர்க்கார், மதசம்பந்தமான சிறு சிறு சில்லரைக் காரியங்களிலும் தன் சிந்தனையைச் செலவிடுவதோடு, அவைகளுக்கு அளவு கடந்த மகிமையை உண்டாக்கும் வகையில் நடந்து கொண்டு வந்திருக்கிறது—நடந்து கொண்டு வருகிறது.

அத்தகைய காரியத்தை, அண்மையில், சென்னை மயிலாப்பூரில் நடைபெற்ற அறுபத்து மூவர் உற்சவம் நடைபெறுவதை யொட்டி, சென்னை சர்க்கார் செய்திருக்கிறது.

பொது மக்களின் போக்கு வரவுக்கு பெரும் இடையூறாக அந்த உற்சவம் நடைபெற்ற போதிலும், உற்சவம் நடைபெற்ற அன்று, பிற்பகலுக்குமேல், மயிலாப்பூர் கச்சேரி ரோட்டில், எவ்வித வண்டி போக்குவரத்தும் அனுமதிக்கப்பட மாட்டாது என சர்க்கார், ஓர் உத்திரவைத் தந்து, உற்சவம் உல்லாசமாக நடைபெற உதவியது.

அது மட்டுமல்ல, அன்று—மார்ச் 17-அந்த உற்சவத்தை யொட்டி, பிற்பகல் சட்டசபை நடைபெறாது என்றும் தெரிவித்திருக்கிறது.

சென்னை சர்க்காரே, திருவிழாவுக்கு சட்டசபை மெம்பர்கள் சென்று, அறுபத்துமூவரையும் கண்டு களித்து, தாங்கள் செய்த கர்மபலனைக் கழுவிக்கொள்ளட்டும் என்று சட்டசபைக் கூட்டத்தைத் தள்ளிவைத்திருந்தால், மக்கள் நலனில் அக்கரையுள்ள மெம்பர்கள், அதை அனுமதிக்காமல் செய்திருக்கலாம். அல்லது, மெம்பர்களே, தாங்கள் திருவிழாவுக்குச் செல்வது தான், சட்டசபை நடைபெறுவதைக் காட்டிலும் அவசியம் என எண்ணி, சட்டசபைக் கூட்டத்தை ஒத்திவைக்க சர்க்காரைக் கேட்டுக்கொண்டனரோ என்னவோ?

எந்த வகையிலோ, உற்சவத்துக்காக சட்டசபைக் கூட்டம் நடைபெறவில்லை—அதுதான் உகந்தது என, மக்கள் நலனில் அக்கரை கொண்ட அரசாங்கம் எண்ணியிருக்கிறது.

இப்படி, அரசாங்கமே அதிக பொறுப்பினை ஏற்ற அந்தத் திருவிழாவில், பலர் காயமடைந்ததாகவும், சிலர் மயக்கமடைந்தனரென்றும், அநேகம் குழந்தைகள் தங்கள் தாய் தந்தையரைவிட்டுப் பரதவித்தன என்றும், ஒருவருக்குக் கார் ஏறி கால் முறிவு ஏற்பட்டதென்றும் ஒரு பத்திரிக்கைச் செய்தி கூறுகிறது.

அது உண்மையானால், அப்படிப்பட்ட விபத்துக்களுக்கு எந்த சட்டசபை மெம்பரும் உள்ளாகியிருக்க மாட்டார் என்று நமக்கு எள்ளளவும் சந்தேகமில்லை. நாம் திடமாக நம்புகிறோம், கால் முறிவுக்கு உள்ளானது எந்த மெம்பராகவும் இருக்க மாட்டார் என்று.

அப்படி எவருக்கேனும், இத்தகைய இடுக்கண் நேரிட்டிருந்தால் இனி இத்தகைய உற்சவங்கள் நடைபெறுவிடுவது, பொதுமக்களுக்குப் பேராபத்தை விளைப்பன என்று உணர்ந்து அவை நடைபெறுமலிருக்க ஆவன செய்துவிடுவரே! அதுமட்டுமல்ல, எவ்வளவு இழிவான செய்கை, இத்தகைய திருவிழாவுக்கு, சட்டசபைக் கூட்டத்தையும் தள்ளிவிட்டு வந்தது என்பதை உணர்ந்து கொள்வரே! நாட்டிலே நல்லுணர்ச்சி ஏற்படவேண்டும், மக்கள் மக்களாக வாழவேண்டும் மற்ற நாட்டவருடன் நமது நாட்டவரும் முன்னணியில் நிற்க வேண்டும், அதற்கு மூட நம்பிக்கை முறியடிக்கப் படவேண்டும்' என்று அல்லும் பகலும் அயராது பாடுபடும் நம்மை நாசகாலர்கள் தூற்றுவதையேனும் நிறுத்திக்கொள்வரே!

இப்படி, அர்த்தமற்ற காரியங்களுக்கு, அரசாங்கம் அமோக மதிப்பளிப்பதும், அதனால், மக்கள் அவதிப்படுவதுமான 'அநாகரிகச் செய்கைகளைக் கட்டிக்காப்பதுதான் இந்த நாட்டுக் கலாசாரம் என்று கூறினால், அப்படிப் பட்ட கலாச்சாரத்தைக் கருத்துத் தெளிவுள்ள யார் தான் பின்பற்ற முடியும்?

மதச் சார்பற்ற சர்க்கார் எனக் கூறிக் கொள்ளும் இந்தச் சர்க்கார். ஓர் சாதாரணமான திருவிழாவுக்காக சட்டசபைக் கூட்டத்தை ஒத்திவைத்தது என்று எண்ணும் பொழுது, இந்தச் சர்க்காரின், 'உள்ளொன்று வைத்துப் புறமொன்று பேசும்' உலுத்தகுணம், உள்ளங்கை நெல்லிக் கனியென தெற்றெனப் புலப்படுகிறதல்லவா?

பழமைக்குப் பக்கமேளம் கொட்டும் பணியைச் சட்டசபையே செய்கிறதென்றால், பழமை மடிவதெப்போது? பண்புள்ள மக்களாக வாழ்வதெப்படி?

மக்களின் நலனுக்காகத் திட்டம் தீட்டுவதைவிட அறுபத்துமூவர் உற்சவத்தில் தலையிடுவதுதான் சிறந்தது எனக் கருதும் கண்ணியவான்கள் உலவும்வரை இந்த நாடு எப்படி உருப்படும்!

மக்களின் நலனுக்காக, திட்டங்கள் தீட்டவேண்டிய சட்டசபை கூடும் காலத்தை, உற்சவத்துக்காகத் தள்ளிவைத்த 'உத்தமர்கள்', அந்தப் பணியைவிட, இது—அறுபத்து மூவர் உற்சவம்—மிக மிக முக்கியமானது—எனக் கருதினால் இது, அதைவிட—நாட்டு மக்களின் நலன்களுக்காக திட்டப்படும் திட்டங்களைவிட—எந்தவகையில்—எந்த அளவு—முக்கியத்துவம் வாய்ந்தது என்பதை அவர்கள் விளக்காவிட்டாலும்—விளக்கமுடியாது—உணர வேண்டும் என விரும்புகிறோம்.

அறுபத்துமூவரின் தலையீட்டால் அரசியல் நடவடிக்கைகள் கூடத் தடைப்படும் அளவுக்கு, நாட்டை ஆளும் இன்றைய அரசியலார், தங்கள் கவனம் முழுவதையும் கடவுட்காரியங்கள் சரிவர நடக்கின்றனவா என்பதைப் பார்த்துக்கொள்வதில் திருப்பி வைத்துக்கொண்டிருக்

கின்றனரே என்பதை எண்ணும்போதுதான், நாம் இவர்களின் இந்த இடர்ப்பாடுகள் நிறைந்தபிடியினின்றும் விடுபடும் நாள் விரைவில் ஏற்பட வேண்டுமென்று எதிர்பார்க்கிறோம். மக்கள் நலனைவிட மகேசனின் நலனே பெரிதென மதிக்கும் இவர்கள் இந்த இருபதாம் நூற்றூண்டிலும் இருக்கின்றனரே என்பதை எண்ணும்போது வெட்கமும் துக்கமும் ஒருங்கே உண்டாகின்றது. மக்களுக்காக மகேசனு? மகேசனுக்காக மக்களா? என்பதைக்கூட எண்ணிப் பார்க்க இவர்களிடமிருக்கும் அறிவு இடந்தரவில்லை போலும்! நடமாடும் தெய்வங்களின் நலனைவிட, நாயு போல் தூக்கப்பட்டு நடுவீதியில் கொண்டு நிறுத்தப்படும் நாயன்மாரின் நலமே பெரிதென மதிக்கும் பேதைமை ஒழியும் நாள் என்று வருமோ. அன்றுதான் நாட்டின் நலன்கள் கவனிக்கப்பட வேண்டுமென்ற கருத்து நாட்டை ஆள்பவர்களுக்கு உண்டாகும். அதுவரை நாம் போராடிக்கொண்டுதான் இருந்தாக வேண்டும். சிரமம் அதிகம் என்றபோதிலும், சிக்கல் மிக்க இந்தக் காரியத்தை நம்மைத் தவிர வேறு யாரும் செய்ய முன்வர மாட்டார்கள்போல் தெரிகிறது! ✲



Edited, Printed & Published by C. N. Annadurai M.A., at "Dravidanadu" Press,
95, Tirukkachinambi St., Kancheepuram.

